


MADRAS GOVERNMENT ORIENTAL SERIES

No. VI

# KONGADĒSA RĀJĀKKAL

# கொங்கதேச இராசாக்கள்

2

Madras Government Oriental Series

Published under the authority of
the Government of Madras

*General Editor:*
T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
*Curator, Govt. Oriental Manuscripts Library, Madras*

No. VI

# கொங்கதேச இராசாக்கள்

# KONGADĒSA RĀJĀKKAḶ



Critically edited with Introduction

BY

**C. M. Ramachandran Chettiar**, B.A., B.L.
Advocate, Coimbatore

GOVERNMENT ORIENTAL MUNUSCRIPTS LIBRARY, MADRAS

1950

**Price Rs. 1-8-0**

# INTRODUCTION

The Government of Madras took up for consideration the question of publication of the various manuscripts in different languages on subjects like Philosophy, Medicine, Science etc., early in May 1948. Important Manuscript Libraries in the Madras Presidency were requested to send a list of unpublished manuscripts with them for favour of being considered by the Government for publication. The Honorary Secretary of the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore, alone complied with this request. This list as well as a similar list of unpublished manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras, were carefully examined and a tentative selection of manuscripts suitable for publication was made. The Government in their Memorandum No. 34913/48-10, Education, dated 4-4-1949 constituted an expert Committee with the Curator of the Government Oriental Manuscripts Library, Madras, as the Secretary, for the final selection of manuscripts suitable for printing and for estimating the cost of publication. The following are the members of the Committee.

1. Sri T. M. Narayanaswamy Pillai, M.A., B.L.,
2. ,, R. P. Sethu Pillai, B.A., B.L.,
3. ,, C. M. Ramachandra Chettiar, B.A., B.L.,
4. ,, R. Krishnamoorthy, (Kalki),
5. Dr. N. Venkataramanayya, M.A., Ph.D.,
6. Sri M. Ramanuja Rao Naidu, M.A. L.T.,
7. ,, V. Prabhakara Sastri,
8. ,, N. Venkata Rao, M.A.,
9. ,, H. Sesha Ayyangar,
10. ,, Masthi Venkatesa Ayyangar, M.A.,
11. ,, M. Mariappa Bhat, M.A., L.T.,
12. Dr. C. Achyuta Menon, B.A., Ph.D.,
13. ,, C. Kunhan Raja, M.A., D. Phil.,
14. ,, A. Sankaran, M.A., Ph.D., L.T.,
15. Sri P. S. Rama Sastri,
16. ,, S. K. Ramanatha Sastri,
17. Dr. M. Abdul Haq., M.A., D. Phil, (Oxon).
18. Afzul-ul-Ulama Hakim Khadar Ahamed,
19. Sri P. D. Joshi,
20. ,, S. Gopalan, B.A., B.L.,
21. ,, T. Chandrasekharan M.A., L.T.

The members of the Committee formed into Sub-Committees for the various languages, Sanskrit, Tamil, Telugu, Kannada, Malayalam, Mahrathi and Islamic Languages. They met during the month of May 1949 at Madras and at Tanjore to examine the manuscripts and make a selection. The recommendations of the Committee were accepted by the

Government in G. O. No. Mis. 2745 Education dated 31-8-1949 and they decided to call these publications as the *Madras Government Oriental Series*, and appointed the Curator, Government Oriental Manuscripts Library, Madras, as the General Editor of the publications. The following manuscripts have been taken up for publication during the current year.

## "A" From the Government Oriental Manuscripts Library, Madras.

### TAMIL

1. Kappal Ṣāttiram.
2. Anubhava Vaidya Murai.
3. Āttānakōlāhalam.
4. Upadēśa Kāṇḍam.
5. Cōlan Pūrva Paṭṭayam.
6. Konga Dēśa Rājākkaḷ.
7. Ṣivajnāna Dīpam.
8. Sadāśiva Rūpam, with commentary.

### TELUGU

1. Saṅgītaratnākaramu.
2. Auṣadha Yōgamulu.
3. Vaidya Nighaṇṭu.
4. Dhanurvidyā Vilāsamu.
5. Yōga Darśana Viṣayamu.
6. Khaḍga Lakṣaṇa Ṣirōmaṇi.

### SANSKRIT

1. Viṣanārāyaṇīyam.
2. Bhārgava Nāḍikā.
3. Hariharacaturangam.
4. Brahma Sūtra Vṛtti Mitākṣarā.
5. Nyāyasiddhānta Tattvāmṛtam.

### MALAYALAM

1. Garbha Cikitsa.
2. a. Vāstulakṣaṇam.
   b. Ṣilpaśāstram.
   c. Ṣilpaviṣayam.
3. Mahāsāram.
4. Kaṇakkusāram.
5. Kriyākramam.

### KANNADA

1. Lōkōpakāra.
2. Raṭṭamata.
3. Dīkṣābōdhe.
4. Aśvaśāstram.

5. a. Auṣadhagaḷu.
   b. Vaidyaviṣaya.
6. Saṅgīta Ratnākara.
7. Sūpaśāstra.

### ISLAMIC LANGUAGES

1. Jamil-al-Ashya.
2. Tibb-E-Faridi.
3. Tahqiq-Al-Buhran.
4. Safinat-Al-Najat.

## "B" From the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Tanjore.

### TAMIL

1. Sarabhēndra Vaidya Muṛai. (Diabetes).
2. —Do— (Eyes).
3. Agastiyar 200
4. Koṅkaṇarśarakku Vaippu.
5. Tiruccitṛambalakkōvaiyār, with Padavurai.
6. Kālacakram.
7. Tālasamudram.
8. Bharatanāṭya.
9. a. Pāndikela Vilāsa Nāṭakam.
   b. Purūrava Cakravarti Nāṭakam.
   c. Madana Sundara Vilāsa Nāṭakam.
   d. Percy Macqueen's Collection in the Madras University Library on Folklore.
10. Rāmayyan Ammānai.
11. Tamil Pāḍalkaḷ including Paṭṭiṉattār Venbā and Vaṉṉankaḷ.

### TELUGU

1. Kāmandakanītisāramu.
2. Tāladaśāprāṇapradīpikā.
3. a. Raghunātha Nāyaka Abhyudayamu.
   b. Rājagōpāla Vilāsamu.
4. Rāmāyaṇamu, by Kaṭṭa Varadarāju.

### MAHRATHI

1. Nātyaśāstra Saṅgraha.
2. a. Book of Knowledge.
   b. Folk Songs.
   c. Dōrā Darūn Vēṇi Paddhati.
   d. Āśvāsa Catula Dumaṇi.
3. a. Pratāpasimhēndra Vijaya Prabandha.
   b. Śarabhēndra Tīrthāvali.

c. Lāvaṇi.

4. Dēvēndra Kuṟavañji.

5. Bhakta Vilās.

6. Ṣlōka Baddha Rāmāyaṇa.

## SANSKRIT

1. Aśvaśāstra with Tricolour illustrations.
2. Rājamṛgānka.
3. Cikitśāmṛtasāgara.
4. Āyurvedamahodadhi.
5. Gītagovinda Abhinaya.
6. a. Colacampu.

   b. Sahendra Vilāsa.
7. Dharmākūtam - Sundara Kāṇḍa.
8. Jātakasāra
9. Viṣṇuṭattvanirṇayavyākhyā.
10. Sangīta Darpaṇa.
11. Bījapallava.

It is hoped that the publication of most of the important manuscripts will be completed within the next four years.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the Library and consequently the mistakes that are found in them could not be corrected by comparing them with other copies. The editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets and correct readings have been suggested in square brackets. When different readings are found, they have been given in the foot notes except in the case of a few books in which the correct readings have been given in the foot note or incorporated in the text itself.

The Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them through the Press. The various Presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

The present edition is based on the following manuscripts :—

1. A paper manuscript with the Government Oriental Manuscripts Library, bearing D. No. 3159 which is $12\frac{1}{2} \times 7\frac{1}{2}$ inches in size consisting of 68 pages having 20-30 lines in a page. It is written in Tamil characters.

2. A palm-leaf manuscript with the Government Oriental Manuscripts Library, having D. No. 2726 which is $14 \times 1\frac{1}{2}$ inches in size consisting of 134 pages having 4-6 lines on a page. This is in Tamil characters.

3. A palm-leaf manuscript with the Government Oriental Manuscripts Library having D. No. 2741 which is 14 × 1½ inches in size consisting of 202 pages having 5 lines on a page. This is in Tamil characters.

4. A paper manuscript with the Government Oriental Manuscripts Library, having D. No. 3158 which is 13 × 8 inches in size consisting of 48 pages having 25 lines on a page. It is in Tamil characters.

These four manuscripts contain an account of the rulers of the Kongadēśa. The years of their reign are given in the śaka era. Valuable historical information about South Indian rulers is here given.

Reference is to be made to the good work done by Sri V.R. Kalyanasundaram, Pandit of this Library for going through the proofs.

Govt. Oriental Manuscripts Library, Madras - 5.

T. CHANDRASEKHARAN,
*Curator*
**and**
*General Editor, Madras Govt. Oriental Series.*

# பதிப்புரை

## 1. சரித நூல்கள்

தமிழர்கள் புலமையைப் பெருமையாகப் பாராட்டினர்களே ஒழிய சரிதத்தைச் சிறப்பாகப் பாராட்டவில்லை. என்றாலும் சரிதத்தை முழுவதும் புறக்கணித்தார்கள் என்று சொல்வதற்கும் இல்லை. சரிதக் கலையிலும் ஆர்வம் இருந்தது. ஆதலால் தான் ஒரு அளவிலாகிலும் சரித நூல்களைத் தமிழில் காண்கிறோம்.

சங்கத்தார் காலத்தில் புலவர்கள் தாங்கள் கண்ட செய்திகளை அழகிய பாடல்களாலே பாடி வைத்திருக்கின்றனர். ஆனால் அவர்கள் சரித்திரக் கண் கொண்டு பாடவில்லை. புலமைக் கண் கொண்டு பாடினார்கள். ஆகவே அப்பாடல்களில் புதைந்து கிடக்கும் சரித வரலாறுகளை மிக ஆராய்ச்சி செய்து தான் வெளியிட வேண்டி வரும். அவ்வித ஆராய்ச்சி தற்போது நடந்து வருகிறது. அது கொண்டு சங்க காலத்துத் தமிழர் வரலாறு இப்போது ஒழுங்கு ஆக்கப்பட்டு வருகிறது. அது போலவே சமண, சைவ, வைணவ காலங்களின் வரலாறுகளும் அருமையான துதிப் பாடல்களின் இடையே புதைந்து கிடக்கின்றன. அவைகளும் இப்போது ஆராய்ச்சி முறையில் எடுத்து வெளியிடப்பட்டு வருகின்றன. இனி சோழ பாண்டிய சாம்ராச்சிய மேம்பாட்டுக் காலங்களில் ஏற்பட்ட வரலாறே கல் வெட்டு ஆதரவுகளைக் கொண்டும் அக்காலத்துப் புலவர் பாடல்களிலிருந்தும் தொகுக்கப்பட்டு வருகின்றது. அக்காலத்தில் கலிங்கத்துப் பரணி, மூவர் உலா, திருத் தொண்டர் புராணம் முதலிய சில நூல்கள் அருமையாகத் தோன்றியிருக்கின்றன. அவைகள் சரித்திர ஆராய்ச்சிக்குப் பேருதவி செய்திருக்கின்றன.

தமிழ் அரசுகள் போய் விஜய நகரம் போன்ற வெளி நாட்டு ஆட்சி ஏற்பட்ட பிறகு தமிழில் பெரு நூல்கள் தோன்ற வில்லை. சரித நூல்களும் குறைவே.

ஆனல் நாட்டுப் பாடல்கள் பல தோன்றியிருக்கின்றன. அவைகளில் கர்ணபரம்பரைக் கதைகளும் உண்மைச் சரிதங்களும் கலந்து இருக்கின்றன. அவைகளில் வெகு சிலவே அச்சாகி இருக்கின்றன. சிறப்பாக அம்மானைப் பாடல்கள் சரித்திர ஆராய்ச்சிக்குப் பயன்படும். ஆங்கிலர் வந்தபிறகு சில அறிஞர்கள் நாட்டுச் சரிதங்களை அறிய வேண்டிப் பாடுபட்டு ஏட்டுப்பிரதிகளையும் கர்ண பரம்பரைகளையும் சேகரிக்கத் தொடங்கினர். அப்பணியில் சில ஆங்கில உத்தியோகஸ்தர்கள் ஈடுபட்டார்கள். அவர்கள் சேகரித்த பிரதிகள் சென்னை அரசாங்கத்துக் கையெழுத்து நூற்சாலையில் இருக்கின்றன.

நாட்டு அரசர்களுடைய சரிதம் அறியவேண்டும் என்ற ஆசை பலருக்கும் இருந்திருக்கும். அந்த வகையில் கர்ண பரம்பரைகளைக் கேட்டுச் சில நூல்கள் எழுதப்பட்டிருக்கலாம். அவைகளில் பல

கொ

உண்மையாக இருக்கின்றன. ஆனால் இடையிடையில் பல செய்திகள் விடுபட்டிருக்கலாம். இவ்விதம் சேகரிக்கப்பட்ட நூல்கள் சில இருக்கின்றன. அவைகளை யார் எழுதினார்கள் எவ்வாறு எழுதினார்கள் என்று சொல்வதற்கு யாதொரு ஆதாரமும் கிடையாது.

## 2. கொங்கு தேச ராசாக்கள்

இப்பெயர் கொண்ட ஒரு பிரதி சென்னை அரசியல் கையெழுத்து நூற்சாலையில் இருக்கிறது. இது மேலே காட்டிய நூல் வகைகளில் ஒன்று. இதனைப் போலவே "பாண்டி மண்டல ராசாக்கள்" போன்ற நூல்களும் உண்டு. "கொங்குதேச ராசாக்கள்" என்ற நூல் அதன் பெயருக்கு ஏற்றாற் போல் கொங்கு நாட்டில் ஆண்ட அரசர்களைப் பற்றிக் கூறுவது. இந்நூல் எப்பொழுது யாரால் எழுதப்பட்டது என்று கூற முடியாது. இதன் நடை சாதாரணமானது. பொதுமக்கள் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய பேச்சுத் தமிழில் எழுதப்பட்டுள்ளது. ஆகவே அதனை எழுதியவர் ஒரு பெரும்புலவர் அல்ல. அரசியல் அலுவலில் வேலைசெய்யும் ஒரு கணக்குப்பிள்ளையாக வெகுவாக இருக்கக்கூடும். தமிழ் நடை பார்த்தால் இருநூறு ஆண்டுகளின்போது நாட்டில் நடைபெற்ற ஒரு நடையாகத் தோன்றுகிறது. மேற்கில் இருந்து வந்த ஒருவர் சரித்திரம் தெரியவேண்டி விசாரித்து ஒரு கணக்கனைப் பிடித்து எழுதச் செய்திருக்கலாம்.

நடை அவ்விதமாக இருந்த போதிலும் அதில் காணும் செய்திகள் மிகவும் அருமையானதாக இருக்கின்றன. பல ஆலயச் சாசனங்களைப் பின்பற்றி வரிசையாகக் கோத்து எழுதியிருக்கும் தன்மை காணப்படுகிறது. ஆகவே இந்நூலுக்கு மூலகாரணமாக இருந்தவர்கள் மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டு பல பொருட்களைச் சேகரித்துத் தொகுத்து எழுதியிருக்க வேண்டும். ஒரு முறை படித்தாலே இந்தப் பெருமை இதில் இருக்கக் காணலாம்.

வம்ச மூலங்களைக் குறிக்கும் போது புராணச் செய்திகளைச் சேர்த்தி யிருந்தாலும் சம்பவங்களைக் குறிக்கும்போது உண்மைகளைத் தெரிந்து கூறப்பட்டுள்ளது. இதனாலே இதனைப் பல சரித்திர அறிஞர்கள் ஒரு ஆதார நூலாக எடுத்து மேற்கோள் காட்டியுள்ளார்கள். இந்த வகையில் இந்நூலை ஒரு சிறந்த சரித்திர ஆதார நூலாகக் கருத வேண்டும்.

## 3. நடைப்போக்கு

நூலின் தமிழ்நடை எளியது என்று குறித்தோம். இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர் நாட்டில் பேசும் தமிழில் நிரம்ப வடமொழிச் சொற்களை இட்டுப் பேசி வந்தார்கள். பேசும் நடைக்கும் நூல் நடைக்கும் மிகுந்த வேற்றுமை இருந்தது. இதனை அக்காலத்து வசன நூலாகிய ஆனந்தரங்க பிள்ளை எழுதிய தினசரிக் குறிப்பு

நூலிலும் காணலாம். வடமொழிச் சொற்கள் தழுவிய தமிழ் நடையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. வடமொழியோடு கன்னடச் சொற்களும் வந்துள்ளன. மேலும் செய்திகள் மிகவும் சுருக்கி எழுதப்பட்டுள்ளன. புராணக் கற்பனைக் கதைகளைப் போல அலங்காரப் பேச்சுக்களை இடை யிடையே புகுத்தி நூலை மிகப் பெரிதாக்க வில்லை. எடுத்துக் கொண்ட செய்திகள் மட்டும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. ஒரு அரசனுக்கும் அவன் பின் வந்தோருக்கும் உள்ள உறவு, பட்டம் பெற்ற நாள், ஆண்ட ஆண்டுகள், செய்த பணிகள், தருமங்கள், போர்கள் புகழ் தரும் செய்திகள், குணங்கள் இவைகளை சிறப்பாகத் தெளிவாகத் கூறி மற்ற வெறுஞ் சொற்களை நீக்கி நூற்சுருக்கம் போன்று எழுதப்பட்டுள்ளது.

நிரம்ப எழுத்துப் பிழைகளும் இலக்கணப் பிழைகளும் இருக்கின்றன. இவைகளை முதலில் எழுதினவன் செய்திருக்க முடியாது பின்னல் பெயர்த்து எழுதின ஏட்டு எழுத்தாளர்கள் செய்திருக்கவேண்டும். ஆகவே அப்பிழைகள் கூடிய மட்டும் திருத்தம் செய்யப்பட்டன.

## 4. செய்திப்போக்கு

செய்திகள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது ஒன்று மட்டும் அல்ல. செய்திகளைச் சேகரித்து ஒழுங்கு படக் கூறியிருப்பதே ஒரு சிறப்பு ஆகும். செய்திகளின் கால வரை நிர்ணயித்து அவைகள் ஆங்காங்கே குறிக்கப்பட்டுள்ளன. காலம் குறிக்கும்போது சாலிவாகன சகமே குறிக்கப்பட்டுள்ளது. இந்தச் செய்தி எவ்வாறு கிடைத்தது என்று ஐயுறலாம். இந்நூல் எழுதும் காலத்தில் நாட்டில் முந்திய நூல்கள் இருந்திருக்க வேண்டும். அவைகளை ஒட்டி இது எழுதியிருக்க வேண்டும். ஆனல் அப்படிப் பட்ட நூல்கள் இருந்ததாக இப்போது தெரியவில்லை. புராணக் கதைகளிலிருந்து இவைகள் எடுக்கப் பட்டிருத்தல் முடியாது. ஆகவே ஆதாரங்கள் எவை என்று ஆராய்தல் மிக்க பயன் தரும்.

ஆலயங்களை ஒட்டிக் கல் வெட்டுக்களும் செப்பேடுகளும் நாட்டில் நிரம்ப இருந்தன. இப்போதும் இருக்கின்றன. இவைகளைக் கொண்டே இந்த நாளிலும் அறிஞர்கள் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். அவ்விதச் சாசனங்கள் கொங்கு நாட்டிலும் கன்னட நாட்டிலும் நிரம்ப இருக்கின்றன. அவைகளைப் பிரதி எடுத்து ஆராய்ந்து தொகுத்து இந் நூலுக்குச் செய்திகளையும் காலக் குறிப்புக்களையும் தேடியிருக்க வேண்டும். பெரும் பான்மையாக இந்நூலில் கண்ட செய்திகள் இப்போது ஆராய்ந்து வெளியிட்டு வரும் வரலாற்றிற்கு மாறுபடாமல் இருப்பதே ஒரு சிறப்பு ஆகும்.

இரண்டு இடங்களில் சான்றுகள் ஒத்து வந்தால் அது சரியானது என்று நீதி மன்றங்களிலும் ஒத்துக் கொள்ளுகிறார்கள் அல்லவா. அந்த முறையில் பார்த்தால் இந்த நூல் ஒரு அருமையான சரித ஆதார நூல் என்றே கூறவேண்டும்.

மேலும், இந் நூலில் செய்திகளைப் பிரித்துப் பாகு படுத்தி எழுதியிருப்பதே ஒழி சிறந்த முறையாகும். செய்திகள் முன் பின் முரண் இன்றி ஒழுங்காகக் கூறப்பட்டுள்ளன. அரச வம்சங்களும் காலவரிசையாகக் கூறப்பட்டுள்ளன. இந்தப் பாகு பாடு நல்ல அறிஞராலேயே செய்யப் படுவது ஆகும். நடை ஒன்றைத் தவிர மற்ற செய்திகள் உயர்ந்த மதிப்பைத் தருவன ஆகும்.

## 5. கொங்கு நாடு

தமிழ் நாட்டிலே கொங்கு நாடு என்பது மிகவும் பழமையான ஒரு பிரிவு. அதன் மக்கள் கொங்கர் எனப்பட்டார்கள். கொங்கர்களைப் பற்றிச் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. எட்டுத் தொகை என்ற பழமையான நூற்றொகுதியிலே பல இடங்களில் கொங்கர்கள் கூறப்பட்டுள்ளார்கள். கொங்கர்களுக்கும் ஏனைய தமிழ்நாட்டரசர்களுக்கும் அடிக்கடி போர் விளைந்திருக்கிறது. அந் நூல்களில் கொங்கு நாடென்பது ஒரு தனி நாடாகவே கருதப்பட்டு எழுதப்பட்டுள்ளது. பிறகு சிலப்பதிகாரம் போன்ற தொடர்க்கதை நூல்களிலும் கொங்கு நாடு கூறப்பட்டுள்ளது. அந்நாட்டில் இளங்கோசர் என்ற ஒரு மன்னர் இருந்ததாகவும் சொல்லப்பட்டுள்ளது. பிறகு சைவ மேம்பாட்டுக் காலத்தில் தேவார ஆசிரியர்கள் கொங்கு நாட்டைத் தனிப் பிரிவாகவே கொண்டு அதன் பாடல் பெற்ற தலங்களைக் கொங்கேழு தேவாலயங்களாக வகுத்திருக்கிறார்கள். பின்னால் கல் வெட்டுக்களிலும் கொங்கு நாடு தனியாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. பழக்கத்திலும் அதன் உள் நாடுகளை இருபத்திநான்காகச் சொல்லி பெயர்களை மக்கள் நாளதுவரை வழங்கி வருகிறார்கள். கல் வெட்டுக்கள் நிரம்பத் தோன்றிய சோழ ஆதிக்க நாள்களில் கொங்கில் ‘கொங்கு சோழர்’ என்று இப்போது குறிக்கப்படும் ஒரு வமிசமும் ஆண்டு வந்தது. இந்த வகையில் கொங்கு நாடு ஒரு தனி நாடு ஆகும்.

இந் நாட்டு எல்லையும் ஒரு குறிப்பிட்ட நிலை கொண்டது. இது சுற்றிலும் மலைத் தொடர்களால் சூழப்பட்ட ஒரு மட்டமான பீடபூமி என்னலாம். ஒரு பழைய வெண்பாவில் இதன் எல்லையும் கூறப்பட்டுள்ளது. வடக்கே தலைமலை, மேற்கே வெள்ளிமலை (மேற்குத் தொடர்ச்சி), தெற்கே வராகமலை (பழனி), கிழக்கே கொல்லிமலைத் தொடர். இதன் இடையில் காவிரி பாய்ந்து நாட்டை இரு கூறுகளாக்கிக் கொண்டு இருபுறத்துச் சிற்றாறுகளையும் தன்னுடன் சேர்த்துக் கொண்டு நாட்டில் புகுகின்றது. இந்த எல்லைக்குட்பட்ட கொங்கு நாடு இப்போதைய கோவை, சேலம் தென்பகுதி, திருச்சி, கரூர், மதுரை, பழனி இந்தப் பகுதிகளைத் தன் இடம் கொண்டு உள்ளது.

இந்த நாட்டின் மக்கள் பண்டைய பண் பாட்டையும் பழக்க வழக்கங்களையும் இன்னமும் கைக் கொண்டு இருக்கிறார்கள். பலகாலங்களில் பிற அரசுகளின் கீழ் வாழ்ந்தபோதிலும் மக்களின் பொது

வாழ்க்கை மாறவில்லை.பழக்கவழக்கங்களும் குணாதிசயங்களும் இன்னும் பண்டைய நிலையிலேயே இருக்கின்றன. இந் நாட்டைச் சுற்றிலும் மூன்று பேரரசர்கள் எப்போதும் ஆண்டுகொண்டு இருந்திருக்கிறார்கள். அவர்களே சேர சோழ பாண்டியர்கள்.அவர்களுள் அடிக்கடி போர்கள் மூண்டவண்ணமாக இருக்கும். அந்தவகையில் கொங்கு நாட்டில் நிரந்தர மான அரசு இருக்க வகை இல்லாமற் போய் விட்டது. இந்த அபாக்கிய மான நிலையில் பல காலங்களில் பல பேரரசுகளின் அடிக் கீழ் வாழ வேண்டிய நிலையும் ஏற்பட்டது. இந்த வகைச் சரிதத்தையே இந்த நூல் வெளிப்படுத்துகிறது.

## 6. அரச வம்சங்கள்

பண்டைக் காலத்தில் அதாவது சங்கத்தார் காலத்தில் கொங்கு நாட்டைக் கொங்கர்கள் என்ற குடி மன்னர்கள் ஆண்டு வந்தார்கள். அக்காலத்திலேயே சில குறுநில மன்னர்களும் ஆங்காங்கே மலைக் கோட்டைகளை அரண்களாகக் கொண்டு ஆண்டு வந்தார்கள். அவர் கள் வேளிர்கள் என்னப் பட்டார்கள். காடுகளாக இருந்து குடி யேற் றம் பெறாத பகுதிகளிலே இருளர்கள் குடியிருந்தார்கள். அவர் கள் பதிகள் என்ற சிற்றூர்களைக் கட்டிக் கொண்டு வாழ்ந்து வந்தார் கள். அவர்களுடைய தலைவர்கள் பெயர்களாலே அப் பதிகளும் வழங் கிவந்தன. இவ்விருளர் தலைவர்கள் ஆண்டுவந்த செய்தியை சோழன் பூர்வ பட்டயம் என்ற கையேட்டுநூல் கூறுகிறது.

பின்னர் காப்பிய நாட்களிலே இந்த நாட்டில் கொங்கு இளங் கோசர் ஆண்டனர். (சிலப்பதிகாரம்) கோசர்கள் ஒருவகை அரச மற பினர்கள். வேளிர்களிலே அதிகமான் தகடூரிலும் (தருமபுரம்), ஆய் தென்கிழக்குப் பகுதியிலும், குமுணன் தென் பகுதியிலும், மலைக் கோட்டைகளில் ஆண்டார்கள். இச் செய்திகள் சங்கநூல் முதலிய தமிழ் நூல்களில் ஆங்காங்கு காணலாம்.

இவர்களுக்குப் பிந்திய அரசவம்சங்களைப் பற்றித்தான்இந்தக் "கொங்குதேச ராசாக்கள்" என்ற நூல் கூறுகிறது. இந்நூற்படி முதல் வம்சம் கங்கர் குலத்திற்குச் சார்ந்த ரெட்டிகுலம். இதில் முதல் அரசன் வீரராய சக்கரவர்த்தி. அவனும் அவனுடைய சந்ததியில் எட்டு அரசர்களும் கந்தபுரத்தில் ஆண்டார்கள்.

அவர்களில் கடைசி அரசன் கொங்கணி தரும மகாதிராயன் சக 101-ல் ஆண்டான். அவனுக்குப் பிறகு காவிரிக்கு வடகரையில் உள்ள தலைக்காட்டில் பின் வந்த அரசர்கள் ஆண்டார்கள். அவ்வாறு ஆண்ட மன்னர்கள் 20 பேர். இறுதி அரசன் இராசமல்லதேவன் (816 சகம்). அவனோடு கங்கைக்குலம் முடிந்தது.

இரண்டாவது வம்சம் சோழவம்சம். கடைசிக் கங்கனை தஞ்சை விஜயாலயச் சோழன் மகன் ஆதித்தியவருமன் ஜெயித்து தலைக்காட் டைப் பிடித்துக் கொங்கு நாட்டை ஆண்டான்.

(894 கி-பி) 816-சகம—சோழர்களில் இராஜராஜன் என்ற அரிவாரிதேவன் 927 (1005 கி. பி.) மிகக் கீர்த்தியோடு கொங்கு நாட்டை ஆண்டான். மொத்தம் 6 சோழர்கள் ஆண்டார்கள். பிறகு ஆண்டது 3-ம் வமிசம். அவர்கள் யதுகுலத்து ஒய்சள வம்சம்.

இவர்களிலே, முதலில் தலைக்காட்டைப் பிடித்து கொங்கு நாட்டை ஆண்டவன் வினயாதித்தியன் 991 (கி. பி. 1069). ஒய்சளர்கள் 7 பேர் ஆண்டார்கள். 1205 (1283)-ல் அவர்கள் வம்சம் தொலைந்தது. நான்காவதாக ஆண்ட வம்சம் யதுகுலத்து ஹரிஹர வம்சம். அது விஜயநகரம் என்ற ஹம்பியில் ஆண்டது. அவர்களில் 5 அரசர்கள் ஆண்டார்கள். பிறகு ஆறாவதாக விஜயநகரத் துளுவ வம்சம் ஆண்டிற்று. நரசிங்கராயன் முதல் திருமலைராயன் வரை 6 பேர் ஆண்டார்கள். இவர்களிலே கிருஷ்ணதேவராயன் 1426 (1494) மிகுந்த புகழோடு ஆண்டான். இராமராயன் காலத்தில் துலுக்கர்கள் விஜயநகரத்தைப் பிடிக்க அரசன் பெனுகொண்டைக்கு வந்து விட்டான் 1490 (கி. பி. 1568). பிறகு சகம் 1506 (1584)ல் கர்நாடகத் துளுவ வம்சம் தொலைந்துபோக மைசூர் அரச வம்சம் ஏழாவது வம்சமாக ஆளத் தொடங்கியது. அம் மைசூர் வம்சத்து இராஜா உடையார் 54-வது அரசனாக 1531-ல் (1609) சீரங்கபட்டணத்தில் அரசாண்டான். அவன் கொங்குநாட்டைத் தன் நாட்டோடு சேர்த்துக்கொண்டு ஆண்டான். இந்த ஏழு வம்சங்களைப் பற்றியும் 54 அரசர்கள் வரலாறுகளையும் மிகச் சுருக்கமாக இந்நூல் கூறுகிறது. இந்நூலில் அவரவர்கள் செய்த ஆட்சிச் செயல்களோடு கோயில்களுக்கு அவர்கள் செய்த தருமங்களும் குறிக்கப்பட்டுள்ளன. படையெடுப்புக்களும் போர்களும் ஆலயத் தாபனங்களும் கூறப்பட்டுள்ளன.

## 7. வேறுபாடுகள்

தற்காலத்தில் கல் வெட்டுக்களின் உதவியைக் கொண்டு ஆராய்ச்சி செய்த சரித்திர வரலாற்றிற்கும் 'கொங்கு தேச ராஜாக்க'ளில் கண்ட வரலாற்றிற்கும் இரண்டு முக்கியமான வேறுபாடுகள் உண்டு. இந் நூலின்படி கொங்கு நாடு முழுதும் அதில் காணும் அரசர்கள் ஆளுகையில் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் கல்வெட்டுக்களை ஆராய்ந்தால் அது சரியல்ல எனத் தெரிகிறது. கொங்குநாடு இரு பங்குகளாக எப்போதும் பிரிக்கப்பட்டிருந்ததாகக் கல் வெட்டுகள் கூறுகின்றன. அவை வட கொங்கு தென் கொங்கு என்பவைகள். பொதுவாக நொய்யலாறு இந்த பிரிவுக்களின் எல்லை ஆகி இருந்தது. கங்கர் ஒய்சளர் முதலிய கன்னட அரசர்கள் வட கொங்கில் மட்டும் ஆதிக்கம் செலுத்தினர்கள் என்று தெரிகிறது. தென் கொங்கு தமிழ்க் குறுநில மன்னர்கள் ஆட்சியிலேயே இருந்திருக்க வேண்டும்.

சோழர்கள் ஆதிக்கம் ஏற்பட்ட பிறகு இரண்டு கொங்குகளும் அவர்கள் கைக்கு வந்தன. அவர்கள் பிரதிநிதிகளாக ஆண்டு வந்து

பின்னால் தன் உரிமையோடு ஆண்ட கொங்கு சோழர்களும் இரண்டு கொங்குகளையும் ஆண்டார்கள். அவர்கள் 1050-1250 வரை ஆண்டிருக்கிறார்கள். இந்த வம்சத்தைக் குறித்து இந்நூலில் ஒரு சொல்லும் குறிக்கவேயில்லை. பின்னால் ஒய்சளர் ஆட்சியில் வட கொங்குமட்டும் அவர்கள் ஆட்சியில் புகுந்தது. தென் கொங்கு சிறிதுகாலம் கொங்கு பாண்டியர் ஆட்சியில் இருந்தது. விஜயநகர ஆட்சியிலே முழுவதும் விஜயநகரத்திற்குச் சேர்ந்தபோதிலும் உம்மத்தூர் தெற்காநம்பிச் சிற்றரசர்கள் ஆதிக்கம் செலுத்திவந்தார்கள். விஜயநகரம் தளர்ந்து போக வடபுறத்தில் மைசூரும் தென்புறத்தில் மதுரை நாயக்கர்களும் பகிர்ந்துகொண்டார்கள். இந்தப் பிரிவினைகள் இந்நூலில் காட்டப்படவில்லை. விரைங்களை விட்டுவிட்டுப் பெரும்பகுதிகளையே எடுத்துக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டிருக்கிறதாக வைத்துக்கொள்ளவேண்டும்.

## 8. இந்நூலில் காணும் சில சிறப்புக்கள்

தலைக்காட்டிலிருந்து ஆண்ட கங்க வம்சத்தார்களில் சில அரசர்கள் ஜைனர்களாக இருந்திருக்கின்றனர். ஜைனக் குரவர்களுக்கு அநேக கிராமங்களைத் தருமம் செய்திருக்கிறார்கள். அவ்விதம் தருமம் செய்த ஒரு கிராமம் கொங்கணி வரும் பசதி என்று பெயர். பசதி என்றால் ஜைனர் சமய விடுதி.

கொங்கணி வருமன் என்ற பெயரை இந்த வம்சத்து அரசர்கள் சிலர் வைத்திருக்கின்றனர். 'கொங்கணி' என்ற பெயர் எப்படி ஏற்பட்டது என்ற விவரம் தெரியவில்லை. இந்த வம்சத்தில் 16 ஆம் அரசன் துருவி கீதன். இவன் கிராதார்ச்சுனீயம் என்ற வட மொழிக் காவியத்திற்கு உரை எழுதினான்.

இவன் காலத்தில்தான் குணாட்டியன் என்ற ஒரு கவி பிருகத் கதா என்ற பெருங்கதையை பைசாச மொழியில் எழுதினான். அதனைத் தமிழில் கொங்கு நாட்டு விஜயமங்கலத்துக் கொங்குவேளிர் தமிழ்க்காவியமாகச் செய்திருக்கிறார். இவ்வரசர்களில் சிலபேர் மந்திர வாதம் தெரிந்தவர்கள். சிலபேர் 14 வித்தைகளைக் கற்றவர்கள்.

சோழவம்சத்து அரசர்களில் 6 பேர்தான் சொல்லப்பட்டு உள்ளார்கள். இராச ராசனுடன் வம்சம் முடிகிறது. அவனோடு கொங்கு தேசசோழரை விட்டு விலகிவிடுகிறது என்று ஊகிக்கலாம். அவனுக்குப் பிந்தி வந்தவர்கள் கொங்குநாட்டைப்பற்றிக் கவலைப்படவில்லை போலத் தோன்றுகிறது. சோழர் காலத்தில் உடன்கட்டையேறும் வழக்கம் இருந்தது. பராந்தகன் மனைவி உடன்கட்டை ஏறினாளாம்.

ஹொய்சளன் என்று பெயர் வந்ததின் கருண பரம்பரைக் கதை இதில் விவரமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வம்சத்தில் பெட்டதேவன் சிறந்தவன். அவன் ஜைனன். அவன் மனைவி முதலில் வைஷ்ணவள் ஆனாள். பிறகு பெட்டதேவனும் இராமாநுசர் மொழியைக் கேட்டு வைஷ்ணவம் ஆனான். இவனுக்குப் பிந்தி வந்த அரசர்கள் வைஷ்ணவர்களே.

பிறகு வந்த விஜயநகரத்து அரசர்களில் ஹரிஹர ராயன் மிகச் சிறந்தவன். அவன் மகன் தேவராயனும் சிறந்த ஆட்சியாளனே. பிறகு வந்த துளுவ வம்சத்திலே கிருஷ்ணதேவராயன் (49) மிக பராக்கிரமசாலி. வெகு நாடுகளைப் பிடித்துக் கருணாடக இராச்சியத்தை முன்னேற வைத்தான். இராமராயன் காலத்தில் துலுக்கர் படையெடுத்து இராச்சியத்தின் வலியைக் குறைத்துவிட்டார்கள்.

துலுக்கருடைய படையெடுப்பால் அரசர்கள் விஜயநகரம் விட்டு பெனு கொண்டை வந்து சேர்ந்தார்கள். இராயரின் ஆற்றல் மிகக் குறைந்து போய்விட்டது. விஜயநகர ஆட்சி குறைந்து போகவே மைசூர் உடையார்கள் தன்னுரிமை பெற்று மைசூரைச் சுற்றியிருந்த பிரதேசங்களில் ஆண்டுவந்தனர். இனி மைசூர் நகரம் தலைநகர் ஆனவுடனே விஜய நகர ஆட்சி குறைந்தது. சாமந்தர்கள் பெருமை பெற்று மன்னர்கள் ஆனார்கள். திறைகொடுக்க மறுத்து விட்டார்கள். இந்த வகையில் மைசூரார் தென்னாட்டு ஆதிக்கத்தைக் கைக்கொண்டு ஆளத் தொடங்கினார்கள்.

## 9. முடிப்புரை

இந்த நூலைப் பல அறிஞர்கள் படித்து அதிலிருந்து சிற்சில குறிப்புக்களை மட்டும் எடுத்துக் கொண்டு ஆண்டிருக்கிறார்கள். ஆங்கிலச் சரித ஆராய்ச்சியாளர்களும் இதிலிருந்து சிற்சில பகுதிகளை ஆராய்ந்திருக்கிறார்கள். மைசூர் நாட்டுச் சரிதத்தை அந்த அரசியலார் பதிப்பித்த போதும் இந்நூலை எடுத்தாண்டு இருக்க வேண்டும். கங்க சம்பவத்திற்கு இந்நூலிலுள்ள ஒழுங்கே எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. தென்னிந்திய சரிதம் எழுதிய கே. வி. சு. ஐயர் அவர்களும் இந்த நூலை மேற்கோள் காட்டுகிறார்.

பல ஆண்டுகளுக்கு முன் மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாகிய செந்தமிழில் இந்நூலில் ஒரு பகுதி வெளிவந்தது. அதன் நடைக்கும் இந்நூல் நடைக்கும் சிறிது பேதம் இருக்கிறது. ஆகவே இந்நூல் பிரதிகள் ஒன்றுக்கு அதிகமாக இருக்கலாம். இப்போது அரசியல் கையேட்டுச் சாலையில் உள்ள பிரதிப்படி இது அச்சிடப்படுகிறது.

கங்க வமிசாவளியை டாக்டர் பெல் "தென் இந்திய சரிதக் கல்வெட்டுகள்" என்ற நூலில் தந்திருக்கிறார் (ப. 346, பல்கலைக் கழகப் பதிப்பு). அதில் கண்டிருக்கும் வமிசாவளி கல்வெட்டுக்களின் உதவியைக் கொண்டு ஏற்படுத்தப்பட்டது. அதற்கும் இந்நூல் வம்சாவளிக்கும் வேற்றுமை உண்டு. அதனை ஆராய்ந்து கொள்க. அடியிற் கண்ட குறிப்பும் ஆராயத் தக்கது. "அனந்தபுரம் ஜில்லாவிலும் மைசூர் கோலாரிலும் கங்க வம்சத்தார் ஆண்டு வந்து பின் மைசூர் பிரதேசம் கோவை சேலம் அடங்கிய கொங்கு நாடு இவைகளைச் சேர்த்திக் கொண்டு தலைக் காட்டைத் தலை நகரமாக்கி ஆண்டார்கள். அவர்களுடைய அரசாங்கம் கங்கை வாழ 96000 என்ற பெயர் பெற்றிருந்தது. அவ்வமிசத்து அரசர்களுக்கு 'பெருமானடி' கொங்குணிவர்மன் என்ற பிருதுக்கள் இருந்தன. 5-ம் நூற்றாண்டில் பணவாசிக் கடம்பர்களுக்கும் 7-ம் நூற்றாண்டில் சளுக்கியர்களுக்கும் 8-ம் நூற்றாண்டில் இராட்டிர கூடர்களுக்கும் கீழ்ப்பட்டு ஆண்டார்கள். தனி ஆட்சி பெற்றிருந்தும் அடுத்துப் பெருகிய வலிய அரசுகளுக்குக் கீழ்ப்பட வேண்டி வந்தனர்—" என்ற குறிப்பு இங்கே நோக்கத்தக்கது. அவ் வம்சாவளிப்படி ஹரிவர்மன் (450) முதல் கொண்டு இராச மல்லன் (1004) இறுதியாக இருபது மன்னர்கள் ஆண்டனராம். பிந்தி தோன்றின கங்கர் குலத்தில் சீயகங்கன் அமராபரணன் என்ற ஒரு மன்னன் இருந்ததும் குறிக்கத் தக்கது (1180).

இந்தக் குறிப்புக்களை வைத்துக் கொண்டு இந்த நூலை அன்பர்கள் வாசித்துப் பயன் பெறுவார்களாக.

கோவை<br>15—2—50

**ராமச்சந்திரன்.**

ஸ்ரீ

# கொங்கதேச இராசாக்கள்

ஸ்ரீ வீரருச சக்கிர விருத்தி-1

கலியுகத்திலே [2]ருசசரித்திர புஸ்தகத்திலே [3]முதல் கொங்க தேசத்திலே ஸ்கந்தர் புரத்திலே [4]ரெட்டிகுலத்திலே உண்டாயிருக்கிற ஸ்ரீ [5]வீரருச சக்றவிருத்தி கொங்கதேசம் பட்டம் கட்டிக்கொண்டு கிரீடம் [6]தரிச்சுக்கொண்டு சகல பாக்கியத்தை [7]அடைஞ்சு நல்ல நீதி ஞானம் [8]தெரிஞ்சு [9]ருச்சியம் [10]ரெக்ஷித்தான்.

கோவிந்த ராயன் பட்டம்-2

சூரிய வம்சத்திலே கொங்கதேசத்திலே ஸ்கந்தர் புரத்திலே கோவிந்தராயன் பட்டம் கட்டிக்கொண்டு தகப்பன் ஸ்ரீ வீரராய சக்கிரவர்த்தியைக் காட்டிலும் அதிகமாய் பூமண்டலத்திலே வெகு கீர்த்தியை அடைந்து தனக்குச் சமானம் இராச்சியத்திலே ஒருத்தருமில்லை யென்று வெகு சந்தோஷத்தை யடைந்து இராச்சியம் இரக்ஷித்தான்.

கிருஷ்ண ராயன் பட்டம்-3

கொங்க தேசத்திலே ஸ்கந்தர்புரத்திலே கிருஷ்ணராயன் பட்டம் கட்டிக்கொண்டு தன் தகப்பன் கோவிந்த ராயனைக் காட்டிலும் நீதி சாத்திரம் விசாரித்து இராச்சியத்திலே யிவனுக்குச் சமானமில்லை யென்று கீர்த்தியை அடைந்தான்.

கல வல்லவ ராயன் பட்டம்-4

கொங்க தேசத்திலே ஸ்கந்தர்புரத்திலே கல வல்லவ ராயன் தகப்பன் கிருஷ்ணராயனைக் காட்டிலும் நீதி சாஸ்திரம் விசாரித்து இராச்சியம் இரக்ஷித்து[11] போக பாக்கியத்தை அடைந்து வெகுகீர்த்தியை அடைந்தான்.

கோவிந்த ராயன் பட்டம்-5 சகை-4

கொங்கதேசத்திலே ஸ்கந்தர் புரத்திலே கோவிந்தராயன் பட்டம் கட்டிக்கொண்டு அவன் தகப்பன் கலவல்லவராயனைக் காட்டிலும் அதிகமாய்க் கீர்த்தியை அடைந்து சத்துரு இராசாக்களிடத்திலே யுத்தத்துக்குப் போனல் அவர்களை செயம்பண்ணி அவர்கள் சகலமானபேர் கையிலேயும் கப்பம் வாங்கிக்கொண்டு அநேக தருமம் செய்து இராச்சியம் இரக்ஷித்தான். [12]அப்போ சாசனம்-சாலிவாகன

---

[1] வீரராச சக்கரவர்த்தி [2] ராச [3] முதற்கண்-(பாடபேதம்.) [4] ரெட்டி-ராட்டிர கூடம் என்பர் [5] வீரராச சக்கரவர்த்தி [6] தரித்து [7] அடைந்து [8] தெரிந்து [9] ராச்சியம் [10] இரட்சித்தான். (இவைகளைப் போலவே பின்வரும் பிழைகளையும் கொள்ளுக.) [11] மிக்க இன்பம் அநுபவித்து (பாடம்) [12] அப்போதைய

[1]சகை வருஷம் 4. சுபானு வருஷம்-17—வைசாக சுத்த பூர்ணமியிலே யிந்த கோவிந்தராயன் அரிஷ்டண்ணனென்கிற [2]செயினியனுக்குப் பூமி சாசனம் பண்ணிக் கொடுத்தான். அந்தபூமி குலஸ்த கிராமத்திலே சேர்ந்திருக்கிற பொம்ம கொம்மமென்கிற கிராமத்திலே ஏழு கண்டகம்[3] [4]விரைக்கிற பூமி வயல் கொங்கணி வருமம் [5]பேஸ்தி செயினிய தேவதார்ச்சனை கோவிலுக்குக் கொடுத்த தருமசாசனம். அந்தக் கோவில் பூசை பண்ணுகிற அரிஷ்டண்ணனுடைய குருவினுடைய பேர் பிரஞாபஞசாரி. அவன் ஸ்ரீ காரே விருக்ஷ மூலத்திலே வாசம் பண்ணுகிறவன். அந்த நாளிலே இருந்த செயினியருடைய பெயர் பஞ்சநந்தி செக்கப்பன் செயதேவன்.

சதுர்ப்புச கன்னர தேவ சக்கர வருத்தி பட்டம்-6

சூரிய வம்சத்திலே ரெட்டி குலத்திலே உண்டாயிருக்கிற அவனுக்கு நாலுகை. அவன் கொங்கதேசத்திலே[6]........ த்திலே பட்டம் கட்டிக்கொண்டு யுத்தத்துக்குப் போக வேணுமென்றால் சந்தோஷத்துடனே பதினெட்டு வாத்தியத்துடனே போய் செயம் பண்ணுகிறவன். வீணா [7]..................தெரிந்தவன். கோதண்டம் முதலான நாகா[8]............... தெரிந்தவன்.....................(?)........க்களுடைய பிருது அடைந்து இராச்சியம் வெகு நீதியுடனே இரக்ஷித்தான். இப்படி மூன்றுபேர் அந்த செயினிய சாஸ்திரம் தெரிந்தவர்கள். அவர்கள் குரு நாகநந்தி யென்கிறவன் அவர்களுடைய வேதஞானம் நன்றாய்த் தெரிந்தவன். அந்த மதத்திலே யிருக்கிற இராசர்க்களுக்கு அவர்கள் மதத்தினுடைய ஞான சாஸ்திரம் சொல்லுகிறவன். அப்போது அவன் மிகவும் கிழவன்.

திரு விக்கிரம தேவ சக்கிர வர்த்தி பட்டம்-7 சகை-100

அவன் மகன்[9] ஸ்கந்தபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இராச்சிய பரிபாலனம் பண்ணினன்-அப்போ(து) அவனுக்கு சங்கரதேவர்[10]........................செயினிய மதத்தை விட்டு சிவனுடைய மதத்திலே[11] ஞான முண்டாய் தெக்ஷிணதேசம் செயம் பண்ணுகிறத்துக்குப்[12]போகச்சே பூதானம் முதலானதும் தருமம்பண்ணி சோள(மு) பாண்டிய கேரள மலையாளம் முதலான தேசமும் செயம் பண்ணி வந்தான். அப்போ(து) பூதானம் பண்ணின சாசனம்[13]வயணம்-சாலிவாகனசகை வருஷம்-ள-சித்தார்த்தி வருஷம் வையாசி மாசம் சுக்கிலபக்ஷத்திலே திங்கள்கிழமையில் சந்திர[14]கிராணம் பாதி பிடிக்கிற வேளையிலே திரு விக்கிரமதேவ சக்கிரவர்த்தியானவன்

---

1 சகை-சாலிவாகன சகம் (இச்சொல் வருகிற இடம் எல்லாம் அப்படியே கொள்க.) 2 ஜைனனுக்கு 3 கண்டகம்-சலகை 4 விரைப்பாடு 5 பசதி-ஜைன நிலயம் 6 ஸ்கந்தர்புர 7 கானம், பரதம் (பாட பேதம்) 8 நாகாதிமந்திரம் 9 திரு விக்கிரமதேவசக்கரவர்த்தி-(பாடபேதம்) 10 தோன்றி 11 வரும்படி கட்டளையிட அவனுக்கு 12 போகையிலே 13 விவரம் 14 கிரகணம்

பாரத்துவாச கோத்திரத்திலே உண்டாயிருக்கிற வித்துவான் நரசிங்கப்பட்ட குருவுக்கு பஞ்ச[1]......................................................அந்த கிராமம் கொங்கதேசத்திலே(யும்)அந்த சங்கரதேவர் கோவில் ஸ்கந்தபுரத்திலே(யுமி)ருக்குது. இந்த ராசாக(ர்)ளுடதேசங்கூட இரக்ஷித்தான்.

ஸ்ரீமத் கொங்கணீவர்ம தருமமகாதிராயன் பட்டம் பட்டம்-8 சகை-111

[2]காண்வாயன கோத்திரத்திலே கெங்கர் குலத்திலே உண்டாயிருக்கிற ஸ்ரீமத் கொங்கணீவர்ம தருமமகாதிராயன் கொங்க தேசத்துக்கு விசயஸ்கந்தர்புரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இராச்சியம் இரக்ஷித்தான். அந்த இராசா சத்துரு இராசாக்கள்பேரிலே செயம்செய்யப் [3]போகச்சே தன்னுடைய சுத்தியினாலே ஒரு கல்லை வெட்டி, அந்தக் கல்லை வெட்டினாப்போலே சத்துரு இராசாக்களை வெட்டி செயம்பண்ணுகிறேனென்று பிரதிக்கினைபண்ணிக்கொண்டு போய் இவனுக்கு சத்துருவாயிருக்கிறவர்களைக் கொன்றுபோட்டு இவனுக்கு சத்துருவல்லாத பேர்கள் கையிலே கப்பம் வாங்கிக்கொண்டு வந்து நல்ல ராச்சிய ஸம்பத்தை அடைந்தவன். இவன் பண்ணுகிற தருமம் எப்படி யென்றால் தன்னுடைய வம்சமாகிற கெங்கர் குலத்திலே பண்ணுகிற பாபமாகிற அந்தகாரங்களுக்கு இந்த ராசா ஆகாசத்திலே வெளிச்சமா யிருக்கிற சூரியனைப்போலே இருக்கிறவன். மிகுந்த சம்பத்தை அடைந்தபடியினாலே அவனுக்கு ஸ்ரீமத் என்று பேர் முதலிலே[4]உண்டாச்சுது. வெகுதருமத்துடனே இராசநீதி செய்தபடியினாலே கடைசியிலே தருமமகாதிராயனென்று பேர் வந்தது. சம்பத்து, தருமம், கொங்கதேசப்பட்டம், இதுகளினாலே ஸ்ரீமத். கொங்கணீ வர்ம தரும மகாதிராயனென்று வெகு கீர்த்தியை அடைந்து இராச்சியம் இரக்ஷித்தார். அவர் பட்டாபிஷேக சகை வருஷம் 111 பிரமதூத வருஷத்திலே பட்டாபிஷேகம்.

ஸ்ரீமன் மாதவ மகாதிராசன் பட்டம்-9

அந்த இராசாவுக்குப் புத்திரனாயிருக்கிற ஸ்ரீமன் மாதவ மகாதிராசன் விசய ஸ்கந்தபுரத்திலே கொங்க இராச்சியம் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு தன்னுடைய தகப்பனைக் காட்டிலும் அதிகமாய் இராச்சியம் இரக்ஷித்து அனேக வித்தைகளினாலே நீதிமார்க்கம் தெரிந்து இராச்சிய பாக்கியத்தை யடைந்து வித்துவான்கள் கவீச்வராள் யாசக செனங்கள் இவர்களுக்கு அனேக திரவிய வஸ்திரம் முதலானதும் கொடுத்து கற்பக விருக்ஷத்துக்குச் சமானமாய்கேட்டது கொடுக்கிறானென்று லோகத்திலே வெகு கீர்த்தியை அடைந்து இராச்சியம் இரக்ஷித்தான். அதினாலே ஸ்ரீமன் மாதவமகாதிராசனென்றுகீர்த்தியை அடைந்தான்.

---

[1] தசகோடி கிராமம் தர்மசாசனம் [2] காஹ்ணவாயன-கங்காகுல (கங்காநதிக்கு காஹ்ணவாயனி என்றொரு பெயர் உண்டு) [3] போகையிலே [4] உண்டாயிற்று.

ஸ்ரீமத் ஹரி வர்ம மகாதி ராயன் பட்டம்-10 சகை 210

அவன் மகன்[1]..........................................................விசய ஸ்கந்தபுரத்திலே கொங்கதேசம் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு கர்னடக தேசத்துக்கு பெரிய பட்டணமாயிருக்கிற[2] த(ள)வனபுரத்திலேயும் இருந்துகொண்டு க(ர்)னடக இராச்சியத்தையும் இரக்ஷித்துக்கொண்டு சாம தானம் பேதம் தண்டம் இந்த நாலு உபாயங்களினலே அநேக இராசாக்கள்கையிலே கப்பம் வாங்கிக்கொண்டு நாலு சமுத்திர மத்தியத்திலே யிருக்கிற தேசங்களிலே இவன் மகா சூரனென்று கீர்த்தி உண்டாய் லக்ஷ்மியோடே கூடியிருக்கிற ஸ்ரீமன்[3]..................யைக் காட்டிலும் அதிக சம்பத்து உடைத்தான படியினலே ஸ்ரீமத் ஹரிவரும மகாதிராசனென்று பேரை அடைந்து அனேக செனங்களுக்கு பூதானம் முதலாய தருமம் பண்ணினன். பூதானம் பண்ணின வயணம் சகை வருஷம் 210........[4]...........பங்குனி மாசம் சுக்கிலபக்ஷம்[5] ..................த்திலே தகடூர் என்கிற கிராமம் தலேக்காடு முன்னே யிருக்கிற பேட்டையிலே குடியிருக்கிற[6] சிபாய்கள் சகலமானபேருக்கும் மூணுபங்கும் அந்த கிருமத்திலே யிருக்கிற மூலஸ்தானேசுவர சுவாமி (அது) பூசைசெய்கிற பிராமணனுக்கு ஒருபங்கும் இந்தப்படி பூதானம் பண்ணிக் கொடுத்தான்.

விஷ்ணு கோப மகாதி ராசன் பட்டம்-11

அவன் மகன் விஷ்ணு கோப மகாதிராசன் தளவனபுரமென்கிற தலேக்காட்டுப் பட்டணத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு சதுரங்க சேனேகளுடனே பூருவதிக்கு செயம்பண்ணி வெகு சூரனென்று கீர்த்தியை அடைந்து பரோபகாரம் பிராமண பூசை குருபூசை முதலான தருமம் பண்ணி இராச்சியங்களிலே விஷ்ணு கோவில் கட்டுவித்து ஹரிபக்தியுடனே யிருந்தபடியினலே விஷ்ணு கோப மகாதிராயனென்கிறபேர் அதிக கீர்த்தியாச்சுது. அவன் கீழே கொங்கதேசம் கர்னடக் தேசம் கையின் கீழே யிருக்குது(ந்தது).

வளர்த்துக் கொண்ட மாதவ மகாதி ராயன் பட்டம்-12

அந்த விஷ்ணு கோப மகாதிராயனுக்கு முன்னே பிள்ளே உண்டாகாதபடியினலே அந்த வமிசத்திலே மாதவ மகாதிராயனென்று ஒரு பிள்ளே வளர்த்துக்கொண்டு அவன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக் கொண்டு தகப்பன்[7] விசேஷப்படி இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு சிறிதுநாளிருந்தான்.

அதின் பிறகு விஷ்ணு கோப மகாதிராயனுக்கு கிஷ்ணவரும மகாதிராயனென்று பிள்ளே பிறந்தபடியினலே அந்த

---

1 ஸ்ரீமத் ஹரிவர்ம மகாதிராயன் 2 தழைக்காடு (தலேக்காடு தற்காலம் பெயர்) 3 ஹரி 4 சௌமிய வருஷம் 5 பௌர்ணமி பிருகஸ்பதி வார(பாடபேதம்) 6 சிப்பாய்-போர் வீரன் 7 தகப்பனேக் காட்டிலும் நீதியாக (பாடபேதம்)

கிருஷ்ண வரும மகாதி ராயன் பட்டம்-13

கிஷ்ணவரும மகாதிராயனுக்குத் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணி முன்னிருந்த மாதவ மகாதிராயனுக்குக் கணவாய் மலை சமீபங்களிலே சிலதேசங்கள் விட்டு அவன் அந்த ராச்சியத்தை இரக்ஷித்துக் கொண்டிருந்தான். இந்தக் கிருஷ்ண வரும மகாதிராயன் கொங்க கர்ணாடக தேசங்களிலே வெகுநீதியுடனே இராச்சியபரிபாலனம் பண்ணி ஈசுவர பக்தனாய் தளவனபுரத்திலே சில சிவலிங்க பிரதிஷ்டைபண்ணி அந்தக் கோவில்களுக்கும் பூமிகள் விட்டு இந்தகலியுகத்திலே உண்டாயிருக்கிற பாபமாகிற காட்டுக்கு இவன் அக்கினியாயிருந்துகொண்டு தகப்பனைக் காட்டிலும் அதிக நீதியுடனே இராச்சிய பரிபாலனம் பண்ணினான்.

டிண்டிகர ராயன் வசம் பட்டம்-14

அந்த இராசாவுக்குப் புத்திரனில்லாதபடியினாலே அந்த கிஷ்ணவரும மகாதிராயனுக்குப் பிறகு இராச்சியம்முன் [1]வளர்த்துக்கொண்ட வமிசமும் பரிகுலாத்திரிராயன் மகன் டிண்டிகராயன் வசத்திலே யிருந்தது.

ஸ்ரீமத் கொங்கணீ மகாதி ராயன் பட்டம்-15

அதின்பிறகு மந்திரி சேனாதிபதி முதலானபேரும் யோசனைபண்ணி கிஷ்ணவரும மகாதிராசன்[2] தங்கச்சிமகன் ஸ்ரீமத் கொங்கணீ மகாதிராசனுக்கு கொங்கதேச (வச)ம் கர்ணாடகதேசம் இந்த இரண்டு தேசத்துக்கும் இராசாவாய் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணுவித்து அந்த கொங்கணீ மகாதிராசன் அநேக வித்தை அனேக பாஷைகள் தெரிந்து வெகு தேசம் சயம்பண்ணி கப்பம் வாங்கிக்கொண்டு முன்னி ராசாக்கள் நடப்பித்த தருமங்களைக் காட்டிலும் இவன் அதிகமாய் நடப்பிவித்து பரிபாலனம் பண்ணினான். அப்போ(து) அந்த வம்சத்திலே எறே சந்திரடிண்டிகராயன் வசத்திலே கொஞ்சம்தேசமிருந்தது. அதிலே ஆலூர் சமீபத்திலே பரூளகேளூர்(?) கிராமம். அவன் சர்தார் பெண்சாதிக்குத் தருமம் பண்ணினான்.

சகை வருஷம் 288 பிரபவ வருஷம்

துருவினீத ராயன் பட்டம்-16

அவன் மகன் துருவினீதராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு கொங்க கர்ணாடக தேசம் இரக்ஷித்துக்கொண்டு அநேக மந்திரசாஸ்திரம் படித்து மந்திரங்கள் சித்தியாய் சத்துரு இராசாக்களுடைய யுத்தத்திலேபோனால் மந்திரபலத்தினாலே ஊங்காரம் பண்ணினால் சத்துருசேனைகளெல்லாம் ஆயுதங் கையிலே பிடித்தபடி யுத்தம் பண்ணுகிறத்துக்குத் தெரியாமல் நிற்பார்கள். பிரளயகாலத்து [3]எமனைப்போலேசத்துரு இராசாக்களுக்குகாணப்படுவான். கிராதார்ச்சுனீயம் பதினைந்து சர்க்கத்துக்கு [4]டகை பண்ணினவன். கேரள

---

1 ஸ்வீகார (பாடபேதம்) 2 தங்கை 3 ருத்திரனை (பாடபேதம்) 4 டகை-உரை.

பாண்டிய சோழ திராவிட ஆந்திர கலிங்கதேசம்முதலான இன்னம் அநேக தேசம் செயம்பண்ணி கப்பம் வாங்கிக்கொண்டு அவன்கிட்ட வேறேசத்துரு இராசாக்கள் கிட்ட வருகிற(த்துக்கு)தற்குப் பயப்படுகிற படியினாலே துருவினீதராயனென்கிறபேர் பிரசித்தமாச்சுது.

முஷ்கரராயன் பட்டம்-17

அவன் மகன் [1]முஷ்கரராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம்பண்ணிக்கொண்டு தன் தகப்பன் துருவினீதராயனைக்காட்டிலும் தனுர்வித்தை மந்திரசாத்திரம் தெரிந்து தன் தகப்பன் செயம்பண்ணின இராச்சியங்களிலே கப்பங்கள் வாங்கிக்கொண்டு சகல சத்துரு இராசாக்களும் பாதத்திலே விழும்படியாய் வசவிருத்தி பண்ணிக்கொண்டு[2]பிராமணாள் முதலானபேருக்கும் தருமவிக்கினம் பண்ணிக்கொண்டு இருந்தபடியினாலே லோகத்திலே[3]பிறமமறராயனென்று பேர் பிரசித்தமாச்சுது.

திரு விக்கிரம ராயன் பட்டம்-18

அவன் மகன் திரு விக்கிரமராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு லோகத்திலே உண்டாயிருக்கிற அறுபத்துநாலு வித்தையிலே பதினாலு வித்தை தெரிந்து சாமதான பேததண்டம் இந்த[4]..................ங்களினாலே அனேக தேசங்கள் கைவசம்பண்ணி கப்பம் வாங்கிக்கொண்டு அடிக்கடி இராசநீதி விசாரித்துக்கொண்டு துஷ்ட[5] .....................பண்ணி இராச்சியம் இரக்ஷித்தான்.

பூ விக்கிரம ராயன் பட்டம்-19

அவன் மகன் பூவிக்கிரமராயன் தளவனபுரத்திலே பட்டம் வருஷம் சாலிவாஹன சகைவருஷம் 461 சித்தார்த்தி வருஷம் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு கொங்கதேசம் கர்னாடக தேசம் இரக்ஷித்துக்கொண்டு தன் தகப்பன் பண்ணின தருமங்களைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு அனேக தேசங்களிலே செயம்பண்ணி வெகு ஆனை சம்பாதித்து கெசபதி என்று பேர் பிரசித்தமாய் ஆனைக் கொம்புகளினாலே ஆயுதங்கள் பண்ணி அந்த பிருது வைத்துக்கொண்டு தங்கள் வம்சத்திலே முன்னாலே செயம்பண்ணின தேசங்களிலே கப்பம் வாங்கியிருந்தார்..........[6]அந்த தேசத்து இராசாக்களிவனுக்கு கப்பம் கொடாதபடியினாலே[7]..................யிருக்கிற சதுரங்க சேனைகளுடனே யுத்தத்துக்குப் போய் சோளபாண்டிய[8].................................கலிங்க [9]மறுட மஹாராஷ்ட்ரக தேசம் முதலானமட்டுக்கும் செயம்பண்ணி கப்பங்கள் வாங்கிக்கொண்டு வந்து பூவிக்கிரமராயனென்கிற பேர் கீர்த்தியாய் தளவனபுரம் கோட்டை நன்றாகக்கட்டி அனேக

---

[1] புஷ்கரராயன்-(பாடபேதம்) [2] பிராமணர்கள் [3] பிரம அரிராயன் (பிரமஹத்திராயன் - பாடபேதம்) [4] சதுர்வித உபாய [5] நிக்கிரக சிஷ்டபரிபாலனம் [6] சிலகாலம் சென்றபிறகு [7] தன் வசத்திலே [8] ஆந்திர [9] மராட்ட.

தருமம்பண்ணி தேவாலயங்கள் பூசை நன்றாய் நடப்பித்து இராச்சி யம் இரக்ஷித்தான்.

கொங்கணி மகாதிராயன் பட்டம்-20

அவன் மகன் கொங்கணீ மகாதிரராசன் நவ[1]..................யிருக்கிற[2]......................ங்களுடைய காந்திகளினாலே வெகு அலங்காரமாயிருந்துகொண்டு தரும நீதியுடனே இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு தனக்கு அண்ணனைச் சேனாதிபதியாய் வைத்துக்கொண்டு அந்த வல்ல பாக்கியராயன் தம்பி பேச்சின்படி நன்றாய் நடந்துகொண்டு தேக்தேசங்களுக்குப் போய் கப்பங்களை வாங்கிக்கொண்டு அநேக சத்துருக்களை யுத்தம்பண்ணி செயித்து கொங்க கர்னாடக தேச மன்னனாயிரக்ஷித்தான்.

இராச கோவிந்த ராயன் பட்டம்-21

அவன் மகன் இராச கோவிந்தராயன் தளவன புரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு கெங்கை வம்சத்துக்கு நின்மலமா யிருக்கிறவன் நல்ல நீதி மார்க்கத்தை அறிந்து இராச்சியம் இரக்ஷித்தான். தனுசுவித்தையிலே[3]..........ராமனுக்கு சமானம். பாக்கியத்திலே தேவேந்திரனுக்கு சமானம். வெகு பராக்கிரமமா யிருக்கிற இராசாக்களுடைய கிரீட மாலைகளெல்லாம் தன்னுடைய பாதத்திலே விழப் பண்ணுகிறவன், கத்தி, பாணம் முதலான தனுசுக்கள்(?) எடுத்துக்கொண்டு சத்துரு இராசாக்களைச் செயம்பண்ணி வெகுசனங்களை [4]........................க்கு அனுப்புகிறவன். லிங்கதாரி மதத்திலே மிகவும் பிரீதியா யிருக்கிறவன். ஆனபடியினாலே அவனுக்கு நந்தி வருமனென்று பேர் பிரசித்தமாச்சுது. அவன் சிறிதுநாள் முகுந்த பட்டணத்திலே இருந்து இராச்சியம் இரக்ஷித்தான்,

சிவகாம ராயன் பட்டம்-22

அவன் தம்பி சிவகாமராய னென்கிறவன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு தேவ[5]பிராமணாளிடத்திலே வெகு பத்தியுடனே நீதி சாஸ்திரம் விசாரித்து இராச்சிய பரிபாலனம் பண்ணினான். அப்போது பூமி தானம் பண்ணின[6]வயணம்-சிறிதுநாள் முகுந்த பட்டணத்திலே யிருந்துகொண்டு இராச்சிய பரிபாலனம் பண்ணினான்.— சாசனம் பண்ணின வயணம்-சாலிவாஹன சகை வருஷம் வஸ்து[7] 591 சகை-வருஷம்[8] மாகமாசம் உத்தராயணம். சத்துரு இராசாக்களாகிற சிங்கத்துக்கு கெண்ட பேருண்டனாயிருக்கிறவன் சிவமகாராயன் திராவிடதேசம் நெட்டனூரிலே யிருக்கிற வேதசாஸ்திரந் தெரிந்து சுகுணவானாயிருக்கிற விஷ்ணுவினுடைய குமாரன் வாசபேயனுக்கு உலியூர் ஓபளிஹேளி

---

[1] ரத்தினகசிதமா [2] சிம்மாசனத்திலே இரத்தின [3] பரசு [4] யும் வைவசுவத பட்டணத்து-பாடம் [5] பிராமணர்களிடத்திலே [6] விவரம் [7] கிரஹ பாணயுதம் [8] பிரமோதூத சம்வத்சரம்

அள்ளி சர்வமானியமாய் தானம் பண்ணிக் கொடுத்தான். இப்படி இன்னும் அநேக தருமங்கள் பண்ணினன்.

அவன் மகனுக்கு மகன் பிறிதிவீ கொங்கணீ மகாதிராயன் தளவனபுரத்திலே பட்டம் கட்டிக்கொண்டு கர்னடக தேசம் இரக்ஷித்துக்கொண்டு தனக்கு சேனதிபதியாயிருக்கிற ஸ்ரீ புருஷராயனை விசய ஸ்கந்தர்புரத்திலே அவனுக்குப் பன்னிரெண்டு கிராமங்கொடுத்து அவனதிலே யிருந்துகொன்டு சத்துரு இராசாக்களுடனே யுத்தம்பண்ணி செயித்து இராஜாவுக்கு சந்தோஷம் பண்ணின படியினலே அவனுக்கு சவுரியாபரண நரேந்திர சேனதிபதி என்று பேர் வைத்து பூமி கொடுத்த வயணம் சாலீவாஹன சகை வருஷம்[1] 668........................

பிறிதிவி கொங்கணி மகாதிராயன் பட்டம்-23

பிரபவ வருஷம் சித்திரைமீ சுக்கிலபக்ஷம் பஞ்சமியிலே அசுவனி நக்ஷத்திரத்திலே சோமவாரத்திலே ஸ்ரீ புருஷராய சேனதிபதி விசய ஸ்கந்தரபுரத்திலே சேர்ந்த கணவாய் மேலேயிருக்கிற பன்னிரண்டு கிராமத்துடனேகூட, விசயஸ்கந்தரபுரம் தருமம்பண்ணிக்கொடுத்தான். அதுக்கு சாக்ஷி தன் குலத்திலே பிறந்திருக்கிற மந்திரி இராசகுமாரர்கள் தெய்வீ சாக்ஷி மல்லிகார்ச்சுன சுவாமி. இந்தப்படி தருமம்பண்ணிக்கொடுத்தான். அவன் மிகவும் அலங்காரத்துடனேயிருக்கிறபடியினலேயும் நித்யம் அரண்மனையிலே மங்களகரமாயிருக்கிறபடியினலேயும் அவனுக்கு சிவமகாராசாவென்று பேர்வந்து சந்தோஷமாய் இராச்சியம் இரக்ஷித்தான்.

சகை வருஷம் 668

அவன் தம்பி விசயா[தி]த்தியராயனுடைய மகன் இராசவல்ல தேவராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு கர்னடகதேசம் கொங்கதேசம் இரக்ஷித்தான். அவன்ரூபத்திலே மன்மதனைப்போலே, யுத்தத்திலே அர்ச்சுனனைப்போலே, கெம்பீரத்திலே மேரு பர்வதத்தைப்போலே தயையிலே ராமரைப்போலே இப்படியநேக குணங்களுடனேயும் வெகுபராக்கிரமத்துடனேயும் திராவிடதேசத்துக்குப்போய் காஞ்சிபட்டணத்திலேயிருக்கிற திராவிட இராசாக்களை செயித்து சோளராசாவுடன் யுத்தம்பண்ணி அவனுக்கு பயம்பண்ணி வைத்து பிறகு அவனுடனே சிநேகம் பண்ணிக்கொண்டு இந்தப்படி கெங்கர் குலத்துக்கு வெகுகீர்த்தி செய்து வைத்து இராச்சியம் இரக்ஷித்தான்.

இராசமல்ல தேவராயன் பட்டம்-24

---

1 அஷ்ட சஷ்டி உத்தர ஷட்சதம்

கெந்ததேவ மகாராயன் பட்டம்-25

அவன் மகன் கெந்ததேவ மகாராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு சகல இராசாக்களுடைய பிருதுமடைந்து திராவிட தேசத்திலே கப்பம் வாங்கிக்கொண்டு வந்து சோழபாண்டிய இராசாக்களை சிநேகம் பண்ணிக்கொண்டு இராச்சியம் இரக்ஷித்தான்.

சத்தியவாக்கியராயன் பட்டம்-26

அவன் மகன் சத்தியவாக்கியராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இராச்சியங்களிலே துஷ்ட [1]..............................பண்ணிக்கொண்டு தேசத்திலே சத்தியந்தப்பாமல் நீதியாய் நடப்பித்து சத்தியவாக்கியராயனென்று லோகத்திலே கீர்த்தியை யடைந்தான்.

குணதுத்தமராயன் பட்டம்-27

அவன் தம்பி குணதுத்தமராயன் தளவனபுரத்திலே பட்டம் கட்டிக்கொண்டு கொங்கு கர்னடக தேசம் வெகு நீதியுடனே தங்கள் வம்சத்திலே பண்ணின தருமத்தைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு மற்றை இராசாக்களையெல்லாம் சினேகம் பண்ணிக்கொண்டு தன்னுடைய இராச்சியத்தை இரக்ஷித்துக்கொண்டிருந்தான்.

இராசமல்ல தேவராயன் பட்டம்-28

அவன் தம்பி இராசமல்ல தேவராயன் தளவனபுரத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு சகல இராசாக்களுடைய பிருதுமடைந்து அப்போது பாண்டிய ராசன் யுத்தத்துக்கு வந்தவிடத்திலே அவனுக்கு அபசெயம் பண்ணுவித்து சகல இராசாக்களுக்குள்ளும் இவனுக்குச் சமானமான பெலசாலி யில்லையென்று கீர்த்தியடைந்து தன்னுடைய அண்ணனை விசயஸ்கந்தரபுரத்திலே வைத்து இராச்சியம் இரக்ஷித்தான். அப்போது அவன் அண்ணன் குணதுத்தமராயன் தருமம் பண்ணினவயணம் சாலீவாஹன சகை வருஷம் 800.

விகாரி வருஷம் = 303 ஆனிமாசத்திலே குருவாரத்திலே பூர்ணமியிலே புனர்வசு நக்ஷத்திரத்திலே 7 விஷ்ணு குஹாலயமென்கிற செயின்னியதேவர் நவகறும் பெலிபூசை முதலான தருமத்துக்குக் கொங்கண குளீசுவர பகவந்தனுடைய சிஷியன். அவன் சிஷியன் தெசசோமபகவந்தன்-அவன் சிஷியன் அகோர சோமபகவந்தன்-அவன் சிஷியன் சசிபூஷண மகாமுனி. அவனுக்குத் தலைக்காடு நாடு வடகரைநாடு, வீரஅள்ளியென்கிற கிராமம் சர்வமானியமாய் தருமம் பண்ணிக் கொடுத்தான்.

---

[1] நிக்கிரக சிஷ்ட பரிபாலனம்

அதின்பிறகு உபயகாவேரி மத்தியத்திலே பச்சிமரெங்கனயக ருடைய சேவை வெகுநாளாய் கெவுதமர் பூசைசெய்து இருந்தபிறகு இந்தஸ்தலம் வனமாய்போய் திருமலையனென்கிறவன் இரங்கனயகர் கோவில் கட்டுவித்து கொஞ்சம் பிராகாரங் கட்டி ஸ்ரீரங்கபுரமென்று பேர்வைத்து அந்தக் கோவிலுக்கு மேற்கு தன்பேர் வைத்து திருமலை தேவரென்று ஒருவிஷ்ணு பிரதிஷ்டை பண்ணி இந்த இரண்டு கோவிலுக்கும் பூசை முதலான தருமம் நடப்பித்துக் கொண்டு வந்தான். சகை வருஷம்-816 ஆனந்த வருஷம் வைசாகமாசம் சுக்கிலபக்ஷம் சப்தமி சுக்கிரவாரம்.

சோ(ழ)ளவம்சத்திலே கொங்க தேசம் பட்டம்.29

சோ(ழ)ளவம்சத்திலே [1]விசயாடராயன் மகன் ஆதித்யவருமராயன் சோளதேசம் தஞ்சாவூரிலே பட்டம்கட்டிக் கொண்டு கொங்கதேசத்துக்குவந்து கொங்கதேசத்து இராசா வேடர்களை செயம்பண்ணி தலைக்காடு பட்டணம் கட்டிக்கொண்டு இந்த இராச்சியங்களிலே அநேக அக்கிரகாரம் சர்வமானியமாய் தருமங்கள் பண்ணி இந்த இராச்சியமும் இரக்ஷித்தான்.

வீரசோள ராயன் பட்டம்-30

இவன் மகன் வீரசோ(ழ)ளராயன் இந்த கொங்க கர்னடக தேசங்களுக்கும் இராசாவாய் தஞ்சாவூரிலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு, வெகுதேசம் செயம் பண்ணி யுத்தத்திலே பயப்படாமல் வெகு சூரனயிருந்தபடியினலே இவனுக்கு வீரசோழராயனென்று பேர்வந்தது. நாராயணனிடத்திலே வெகு[2]......................................... ...............யானபடியினலே வீரசோழ நாராயணனென்று பேர்வந்தது. இந்த இராசாவும் பாண்டிய இராசாவும் அநேக தேசம் திக்குவிசயம் பண்ணினர்கள். அதன்பிறகு வீரசோள நாராயண இராசாவானவன்................புக்குப் போய் சண்டைபண்ணி சிம்மள இராசாவை செயித்து லோகத்திலே வெகு கீர்த்தியை அடைந்து சோளதேசம் காவேரிதீரத்திலே வீரநாராயணபுரமென்று அக்கிரகாரம் பண்ணி பிராமணளுக்கு சர்வமானியம் பண்ணி இன்னஞ் சிறிது அக்கிரகாரங்கள் சர்வமானியம் பண்ணி தானம் பண்ணியிருந்தான். அவன் ஒருநாள் சமுத்திர தீரத்திலே இருக்கச்சே அவ்விடத்திலே மத்தளவாத்திய சத்தங்கேட்டு அவ்விடம் பார்த்தவிடத்திலே சிதம்பர சபாபதி சுவாமி [3]டமருகவாத்திய மடித்துக்கொண்டு பார்வதியுடனேகூட நாட்டியம் பண்ணுகிறதாய் [4]தோணப்பட்டு வெகு திரவியஞ் செலவு பண்ணி அவ்விடத்திலே கனகசபை கட்டுவித்தான். இந்த இராசா

[1] விஜயாலய [2] பிரீதி [3] டமருகம்-துடி [4] தோன்றக்கண்டு.

வுக்கு வெகுபேர் பிள்ளைகள். அவர்களிலே தேசோதித்திய ராயனுக்குச் சோளதேசமும் அரிஞ்செய ராயனுக்கு திராவிடதேசமும் கொடுத்து ஸ்வர்க்கத்தை அடைந்தான்.

தேசோதித்யராயன் பட்டம்-31

அவன் மகன் தேசோதித்தியராயன் தஞ்சாவூரிலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு அண்ணன் அரிஞ்செயராயனுக்கு திராவிடதேசம் பட்டாபிஷேகம் பண்ணுவித்து கொங்கதேசம் முதலானத்துக்கும் இராச்சிய பரிபாலனை தருமத்துடனே இராச்சிய விசாரணை செய்து காவேரி தீரத்திலே சதுச்சமுத்திரமென்கிறதாய் நாலு அக்கிரகாரம் பண்ணி இராச்சியம் இரக்ஷித்தான். அவனுக்கு புத்திரனில்லை.

பராந்தக ராயன் பட்டம்-32

இவன் அண்ணன் அரிஞ்செயராயன் மகன் முதல் பராந்தக ராயன் பாண்டிய இராசாவுடனே யுத்தம் பண்ணி செயித்து கப்பம் வாங்கிக்கொண்டு தஞ்சாவூரிலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு காவேரிதீரத்திலே அக்கிராகரம் மானியம்பண்ணி பூமிதானம், கோதானம், கன்னிகாதானம் முதலானதும் பண்ணி சேதிராயன் மகள் சித்திரி(ரை) என்கிறவளை கலியாணம் பண்ணி அவளுக்கொரு பிள்ளை பிறந்து பிறகு சத்துருக்களை செயித்தபடியினலே அவனுக்கு அரிமாலியென்று பேர் வந்தது. அதின் பிறகு அவன் பரலோகத்தை அடைந்தான். அவனுடைய பெண்சாதி சித்திரையென்கிறவளும் அவனுடனே கூட [1]அனுகமனம் பண்ணினள். அவளுக்கு வெகுபிள்ளைகள் பிறந்ததுகள்.

திவியராயன் பட்டம்-33

அந்த பராந்தகராயனுடைய பிள்ளைகளிலே திவியராயன் என்கிறவன் தஞ்சாவூரிலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு திராவிடதேசமும் இரக்ஷித்துக்கொண்டு அதின்பிறகு வீரபாண்டியனிடத்திலே மிகவும் பயத்தையடைந்து அதின்பிறகு வீரபாண்டியன் தஞ்சாவூருக்கு சண்டைக்கு வந்தவிடத்திலே அவனுடனே சண்டைபண்ணி செயித்து அவன் காதை அறுத்துப் போட்டான். அப்போது வீரபாண்டியன் மதுரைக்குப் போய்விட்டான். இதனலே இவனுக்கு அரிதிட்டு என்று பேர் வந்தது. அந்த அரிதிட்டுராயன் தஞ்சாவூர் பட்டணத்திலே மந்திரியை மந்திரியை வைத்து தான் உத்தரதேசம் செயம்பண்ணவேணுமென்று போய் வெகுநாள் அவ்விடத்திலேதானே இருந்தபடியினலே இந்த தஞ்சாவூரிலே யிருந்த இராச வம்சத்து சனங்கள் மந்திரி பேச்சைக் கேளாமல் ஒருத்தருக்கொருத்தர் சண்டைவந்து மனுஷ

[1] உடன்கட்டை ஏறினன்.

முகாந்திரமாய் இராசா [1]விசேஷங் கேழ்விப்பட்டு இராசா வந்து துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் பண்ணி காவேரி தீரத்திலே வாய்க்கார கள் வெட்டுவித்து தருமங்கள் முன்நடந்தபடி நடப்பித்து துலாபால னம் முதலான [2]................பண்ணினான். அதின்பிறகு வைதொண்டவம் சத்திவே சத்திகன்களை செயித்து அவனிடத்திலே கனகரத்தின மாணிக்கங்கள் கொண்டுவந்து ஸ்ரீமன்னாராயணனுக்குப் பிரீதியாய் பிராமணாளுக்குக் கொடுத்துவிட்டான். இவனுக்குப் பிள்ளையில்லாத படியினாலே தன்னுடைய தம்பி அரிவாரிதேவனுக்கு பட்டங்கட்டினான்.

அரிவாரி தேவன் பட்டம்-34

அந்த அரிவாரிதேவன் தஞ்சாவூரிலே பட்டாபிஷேகம் பண்ணிக் கொண்டு சோள, திராவிட கொங்கதேசம் முதலாய் இரக்ஷிக்கிற காலத்திலே அப்போது அவன் அண்ணன் திவியராயன் சதுரங்க சேனைகளுடனே மதுரைக்குப் போய் பாண்டிய இராசாவுடனே சண்டை பண்ணின விடத்திலே சண்டையிலே அபசயமாய் பாண்டிய இராசா ஓடிப்போய் விட்டான். அப்போது பாண்டியதேசமுங் கட்டிக்கொண்டு விரிஞ்ச புரம் முதலாய் கொள்ளை பண்ணிக்கொண்டு. திரும்பி தஞ்சாவூருக்கு வந்தான். அப்போதிவன் இராசாக்களை செயித்தபடியினாலே இவ னுக்கு இராசராசாவென்று பேர் வந்தது. இந்த இராசாவுக்கு ஓடிப் போன பாண்டிய இராசாவினுடைய தாய் மிகவும் உறவு. ஆனபடி யினாலே அந்த பாண்டிய இராசாவினிடத்திலே அநேக திரவியபூ(ஷ)ழ ணங்கள் வாங்கிக்கொண்டு அந்த மதுரையை அவன் வசம்விட்டு இரண்டுபேரும் மிகவும் சிநேகிதமாய் இருந்தார்கள். அதின்பிறகு அந்த இராசா சேனாதிபதியானவன் மிகவுங்கிட்டின பந்துசெனமான படியினாலேதான் தானே அவன் வீட்டுக்குவந்து அந்த அமரபுசங்க னென்கிற சேனாதிபதி சந்தோஷத்துடனே இராசாவுக்கு கனகாபி ஷேகம் பண்ணினான். அப்போது இராசா சந்தோஷப்பட்டு தேசங் கள் செயத்துக்கு அனுப்புவித்தான். அப்படியே அந்த அமரபுசங்க னென்கிற சேனாதிபதி சதுரங்க சேனைகளுடனே மேற்கு திக்கிலே யிருக்கிற [1]..............................த்துக்குப் போய் அவ்விடத்திலேயிருந்து கேரளதேசம் செயம்செய்யப் போனவிடத்திலே அந்த இராசாவான வன் சத்துருபலாயனம் முதலான அபிசாரகிரித்தியம் செய்கிறா னென்று கேட்டு அதிகோபத்துடனே போய் கொல்லூர், இந்திரகிரி, நீலகிரி, துர்க்கம் முதலானதும் செயித்து அந்தஇராசா சகலபெலமும் போனபடியினாலே கப்பலேறிக்கொண்டு சமுத்திரநடுத் தீவிலே ஓடிப் போய்விட்டான். அதின்பிறகு சோ(ழ)ளராசா சேனாதிபதியானவன் தங்கள் துரை உத்தாரப்படிக்கு அங்கே அகப்பட்ட திரவியங்களை

---

[1] விஷயம் கேள்விப்பட்டு [2] தருமங்களை

சிவாலயத்தோடே கூடியிருக்கிற கணவாய் ஸ்தலத்திலே நிக்ஷேபம் பண்ணி பச்சிமதிக்கு செயஸ்தம்பம் நட்டு லோகத்திலே வெகுகீர்த்தி வைத்தான் அதின்பிறகு.........................

பீமராயனென்கிறவன் இந்த சமாசாரங்கேட்டு சண்டைக்கு வந்தவனை யுத்தம்பண்ணி செயித்து அவன் மகனையுங் கொன்று போட்டு அதற்குமேல் கலிங்க தேசத்துக்கு யுத்தத்துக்குப் போய் அவனிடத்திலே கப்பம் வாங்கிக்கொண்டு அங்கேயிருந்து [1]நிற்மதா தடத்துக்குப்போய் அந்த தேசங்களிலே அநேக இராசாக்களை செயம் பண்ணி [2]நிற்மதா தடத்திலே செயஸ்தம்பம் நட்டு தெக்ஷிணதிக்குக்கு மகேந்திரகிரி பர்வதத்திலே வியாக்கிர அடையாளத்துடனே செயஸ்தம்பம் நட்டு அப்போது வைதும்பராயன்-காமாற்ணவராயன்-தான பால்லியபீமராயன்-அம்மராயன் முதலான இராசாக்களை செயித்து அநேகம் ஆபரணம் திரவியம் அந்தப்புரஸ்திரீ முதலானதும் கப்பம் வாங்கிக்கொண்டு சுவற்ணத்துமமாயிருக்கிற பீமராயனுடைய பாவபிரதிமை வாங்கிக்கொண்டு சேனைகளுடனே கூடவந்து இராசாவைக் கண்டு இராசா சந்தோஷத்துடனே சம்பாதித்து வந்த சகலதிரவியங்களையும் சிதம்பரேஸ்வரருக்கு தங்கள் பிதாமகன் கனகசபை மாத்திரம் கட்டுவித்தானென்றுதான் கோபுரங்கள் மதில்கள் மண்டபங்கள் சோபானங்கள் முதலானதும் கட்டுவித்து சபாபதிக்கு சகல ஆபரணங்களும் பண்ணி வெகுதருமம் பண்ணினன். அதற்குமேல் துலாபாரதானம் அநேகந்தரம் பண்ணி காவேரி தீரத்திலே அனேக அக்கிரகாரம் சர்வமானியம் பண்ணி சிறிது பூமிதானங்களும் பண்ணினன். அப்போது கொங்கதேசம் கர்னடகதேசம் கைவசத்திலே யிருக்கிறபடியினலே மகாராச சோழராயனைவன் கொங்கதேசத்துக்கு வடபுறத்திலே தலைக்காடுசீமை கேரையூரென்கிற கிறமம் இராசராசபுரமென்று பேர்வைத்து தளவனபுரத்திலே யிருக்கிற தேவபிராமண பூசைபண்ணி தருமம் பண்ணுகிற வைசியர்களுக்குக் கொடுத்து அவர்கள் கையினலே பிராமணள் அக்கிரகார தருமம் பண்ணிக்கொடுத்தான். அந்த வேளையிலே யின்னம் அனேக தருமம் பண்ணிக் கொடுத்தான்.

சாலிவாகன சகைவருஷம்-927 விசுவாவசு வருஷம் மாகசுத்த பஞ்சமி சதய நக்ஷத்திரம் இந்த வேளையிலே தருமதானம் பண்ணிக் கொடுத்து சோளராச்சியம் தஞ்சாவூரிலே யிருந்துகொண்டு இந்த அநேக தேசங்கள் கப்பம் வாங்கிக்கொண்டு இராச்சியம் இரக்ஷித்தான்.

---

[1] நர்மதா [2] நர்மதா

# எதுவம்சம்—ஒயிசள ராசாக்கள்

## வம்சம்

சமஸ்த பிரபஞ்சமும் இரக்ஷிக்கிறவராயிருக்கிற விஷ்ணுவினுடைய நாபிகமலத்திலே பிரமா உண்டானார். அவரிடத்திலே அத்திரி ரிஷி உண்டானான். அத்திரியினுடைய நேத்திரத்திலே சந்திரன். அவனிடத்திலே புதன். புதனிடத்திலே புரோருவன். அவனிடத்திலே ஆயு. ஆயுவினிடத்திலே நகுஷன். நகுஷனிடத்திலே யயாதி. யயாதியினிடத்திலே எது.

எதுவம்சம்

அந்த எது வம்சத்திலே அநேக ராசாக்கள் துவாரகா பட்டணத்திலே இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு இருந்தார்கள். அந்த ராசாக்களிலே [1]சாளனென்று ஒரு ராசா வேட்டையாடுகிற நிமித்தியம் அனேக சேனைகளுடனே தெக்ஷிணதிக்கிலே சிம்மாசலமென்கிற ஒரு பர்வதத்துக்கு வந்து வேட்டையாடுகிற வேளையிலே அவ்விடத்திலே ஒரு முசலானது ஒரு புலியைத் துரத்திவருகிறதைக் கண்டு இந்த க்ஷேத்திரம் நல்ல

வீரக்ஷேத்திரமென்று யோசனை பண்ணியிருக்கச்சே அந்த புலியானது அவ்விடத்திலே ஒரு ரிஷிதபங்கமுனி என்கிறவர் தபசு பண்ணிக்கொண்டிருப்பவரை பாயப் [2]போகச்சே இந்த ராசாவானவன் அந்த புலியை ஒரு பாணத்தினாலே கொன்றுபோட்டான். அப்போது அந்த ரிஷி இந்த ராசாவைப் பார்த்து விசயனென்று பேர் கொடுத்து இந்த சாளனென்கிற ராசாவானவன் அதைக்கொன்ற படியினாலே கர்னாடக பாஷையிலே [3]ஒயிசாளனென்று பேர்வைத்து அந்த தேசத்துக்கும் ஒயிசளதேசமென்று பேர்வைத்து இந்ததேசம் கட்டிக்கொண்டு இராச்சியம் இரக்ஷித்துக் கொண்டிருவென்று அந்த ரிஷியானவர் வரங்கொடுத்த படியினாலே அப்படியே அந்த தேசத்திலே பட்டங் கட்டிக்கொண்டு இருந்தார். பிறகு வெகுநாள் கழித்து அந்த வம்சத்திலே ஒரு ராசா வெகு வணக்கத்தினாலேயும், கீர்த்தியிலே ஆதித்தனைப்போலே யிருந்த படியினாலேயும் [4]வினையாதித்தனென்று உண்டானான்.

ஒயிசள வம்சம்

வினையாதித்த ராயன் பட்டம்-35. சகை வருஷம் 991.

அந்த [5]வினையாதித்தராயன் தலைக்காட்டிலே யிருந்து இந்த ராச்சியம் கொஞ்சம் கொஞ்சமாய் கைவசம் பண்ணிக்கொண்டு இந்த தேசங்களிலே யிருக்கிற பாளையகாரரை பிரீதிபண்ணிக்கொண்டு [6]கொஞ்சதேசம் இரக்ஷித்துக் கொண்டிருந்து அதற்குமேல் தலைகாட்டிலே இருக்கப் படாமல் துளுவதேசத்துக்குப் போய் அங்கே சிறிது கிராமம் கைவசம் பண்ணிக்கொண்டு இருந்தான்.

---

1 சளன் 2 போகையிலே 3 ஹொய்சளன் 4 வினயாதித்தன் 5 வினயாதித 6 கொங்க

அப்போதிந்த கர்ணுடக கொங்கதேசங்களிலே முன்னுலே சோழ ராயனுக்கு கப்பங் கொடுத்துக்கொண்டிருந்த பாளையக்காரர் வசமா யிருந்தது இந்த தேசம். இந்த வினையாதித்யராயன் தலைக்காட்டிலே ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கச்சே அவன் மந்திரி வித்தியாவினையன் தலைக்காடு மல்லிகார்ச்சுன சுவாமிக்கு தங்கள் எச மானன் உத்தாரங் கேட்டுக்கொண்டு பூமிதருமம் கொடுத்தான். சாலீ வாஹன சகைவருஷம் 991 சாதாரண வருஷம் சைத்திரசுத்த பஞ்சமியில் பூமிவயணம் எழுத்து [1]போச்சுது.

அந்த வினையாதித்தியனுடைய ஸ்திரீ வலதேவியினிடத்திலே வல்லாளனென்று பிள்ளை உண்டானுன்.

வல்லாள ராயன் பட்டம் சகை 1015

வல்லாளராயன் சசபுரத்திலே யிருந்து [2]கொஞ்சதேசம் இராச் சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு தனக்கு தம்பி பெட்டதேவன், உதயாதித்தியதேவன் இந்த இரண்டு பேர்களுடனே கூட வெகு சேனைகள் சேர்த்துக் கொண்டு தன்னுடைய மகன் பெட்டதனுடனேயும் தலை காட்டுக்கு வந்து கொங்கு பாளையக்காரரை செயித்து அந்த தலைக் காட்டிலே பட்டம் கட்டிக்கொண்டு அவ்விடத்திலே நின்றும் நொளம் பவாடி கெங்கைவாடி பனவசை ஆனைகல்லு செயம்பண்ணி [3]சின்ன மதத்திலே யிருந்துகொண்டு அந்த சாஸ்திரம் விசாரித்துக்கொண்டு இருந்தான். அவன் மந்திரி எக்கடைலகுமையன் தன்னுடைய எசமானன் கையிலே உத்தாரம் வாங்கிக்கொண்டு சென்னகேசவ சுவாமிக்கு பத்து கண்டகம் பூமி தருமதானம் பண்ணிக்கொடுத்தது. சகைவருஷம் 1015 அக்ஷயவருஷம் புஷியபொகுள திரயோதசி மங்கள வாரத்தில் தருமதானம் பண்ணிக்கொடுத்தான். அந்த வல்லாளராயன் ஸ்திரீ..............டத்திலே பெட்டதிராயன் பிறந்தான்.

பெட்டத விஷ்ணுவர்த் தனராயன் பட்டம் 37 சகை 1020

பெட்டத விஷ்ணுவர்த்தனராயன் தலைக்காட்டிலே பட்டாபி ஷேகம் பண்ணிக்கொண்டு அவன் மந்திரி மாதவனுயக்க னுடனே கூடிக்கொண்டு சிறிது சேனைகள் சேர்மானம் பண்ணிக்கொண்டு சசபுரம் வாசந்திகாதேவி வரப்பிர சாதத்தினுலே துளுவதேசம் சக்கரகூடம் முச்சங்கி கோளாள நிலாவளதுர்க்கம் இராயராயோத்தமபுரி தென்யக்கூர் கொத்தவாடி, கொங்கு இதுமுதலான தேசங்கள் செயித்து மேற்கு மலையாளம், குடகுமட்டுக்கும், வடக்கு சாதிமலை, தெற்கு கொங்கு, கிழக்கு ஆலம்பாடி இதுமத்தியத்திலே யிருக்கிற தேசங்களை இரக்ஷித்துக்கொண்டு குருவினிடத்திலே வெகு பக்தி யுடனே, இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு அல்சூர் காந்தரபுரத்

1 போயிற்று 2 கொங்க 3 சமி.

திலே தனக்கு அரண்மனே கட்டுவித்து தலைக்காடு இராச்சியம் இரக்ஷிக்கிறகாலத்திலே சோழராசா யுத்தத்துக்கு வந்தவன் சண்டைப்பண்ணி செயித்து கேரளதேசத்து ராசாவுடனே வெகு யுத்தம் பண்ணி அவன் சேனேகளில் வெகு சனங்களைக் கொன்று போட்டு வடக்கே மாளவதேசமட்டுக்கும் செயம்பண்ணி வெகுதிரவியம் வாங்கிக் கொண்டு, பாக்கியத்திலே தேவராசாவுக்கு சமானமாய், ரூபத்திலே மன்மதனைப் போலே சரணுகெதமாய் வந்த பேர்களை இரக்ஷித்துக் கொண்டு கவீசுவரனை இரக்ஷிக்கிறவன் தங்கள் மதத்திலே யிருக்கிற [1]செயினிய சாத்திரம் விசாரித்து அவர்களை இரக்ஷித்துக்கொண்டு, கெங்கண்ணிய சளுவதேவர் கெங்கவாடி [2]ஞேனம்பவாடி செனங்களை துஷ்டநிக்கிரஹம் சிஷ்டபரிபாலனம் பண்ணி தன்செனம் வெகுசனங்களை இரக்ஷித்து அதற்குமேல் அவனுடைய ஸ்திரீ ஸ்ரீரங்கத்துக்குப் போய் வைஷ்ணவமதம் [3]செய்துகொண்டு, அந்த சாஸ்திரம் நன்றாய் விசாரித்து இது மெய்யான சாஸ்திரமென்று மனத்திலே பத்தியாய் தேவபிராமணுளிடத்திலே வெகு பத்தியடைந்து, வெகு தானதருமம் கன்னிகாதானம்-உபனயனதானம் பண்ணி வெகு சந்தோஷத்துடனே வந்து தன்னுடைய புருஷன் பெட்டராயனுக்கு வியாசராலே சொன்ன தருமசாஸ்திரம் விசாரிக்கச் சொல்லியும் தேவபிராமணுளை இரக்ஷிக்கச்சொல்லியும் இந்தப்படி தன்புருஷனுக்குச் சொல்லிக் கொண்டு வருவாள். அதுகேட்டு பெட்டராயன் பேசாமலிருப்பான். அதின்பிறகு இராமானுசாசாரி யென்கிறவர் சோழ தேசத்திலே யிருந்து இவ்விடத்துக்கு வந்து பெட்டராயனுடைய ஸ்திரீ விஷ்ணு மதத்திலே யிருக்கிறபடியினலே தான்வந்த சமாசாரம் அவளுக்குச் சொல்லியனுப்புவித்தார். அவளுஞ் சந்தோஷப்பட்டு தன்னுடைய புருஷனேடு சொல்லி அவரைத் தன்னுடைய அரமனேக்கு அழைப்பித்துப் பேசினவிடத்திலே அந்த ராசா செயினியர் சாஸ்திரம் மெய்யாயிருக்குதென்று சொன்னபடியினலே செயினிய சாஸ்தி..................

இந்த விஷ்ணுவர்த்தராயன் பூமிதருமம் பண்ணினவயணம்.
சகை வருஷம்-102-விக்கிரம வருஷம் மாகமாசம்
சகை-1020 அவிட்ட நக்ஷத்திரத்திலே சிவயோகம்-பெவகரணம்-இந்த
தினத்திலே ஸ்ரீரங்கபட்டணம்.

அக்காசி அக்கம்மா எடத்துறையிலே சேர்ந்த-குருவனுங்கிராமம் சமக்கிரமாய் பச்சிமரங்கனுத ஸ்வாமிக்கு கெங்கை சன்னதியிலே தாராபூர்வகமாய் தருமதானம் பண்ணிக்கொடுத்தான்.

---

[1] ஜைன [2] ஜொளம்பவாடி [3] சேர்ந்து

அதன்பிறகு விஷ்ணுவர்த்தனராயன் தளவாய், கெங்கை தெண்டதேனயக்கன் தங்கள் ராசாவினுடைய உத்தாரத்தின்படி தங்கள் குருக்கள் சுசசந்திரசித்தாந்ததேவருக்குக் கொடுத்த பூமிவயணம்-சகைவருஷம் 1039. விளம்பி வருஷம். பால்குன சுத்தபஞ்சமி சோமவாரத்திலே தங்கள் பௌளகுளம் சுவாமி பூசைக்கு பௌளகுளகிராம சமக்கிற தருமதானம் பண்ணிக் கொடுத்தான்—பூமிதானம் சகைவருஷம்-1033.

விஷ்ணுவர்த் தனராயன் சகை 1039

நந்தன வருஷம் மார்க்கசிர சுத்த அஷ்டமி சோமவாரத்தில் விஷ்ணுவர்த்தனராயருடைய சேனநாயகராயிருக்கிற, பண்டனயகன் கெங்கை மையிதரிசூர்ண தெண்டநாயகன். இவர்கள் செயினிய ஸ்வாமிக்கு தங்கள் எசமானனை பெட்டதராயனைக் கேட்டுக்கொண்டு மைசூர் சீமை பெடவனஅள்ளி முன்னேயிருக்கிற ஏரி, கீழே வயல் இருபது. சலகை விரைக்கிற பூமி. ஏரிக்கு வடபுறத்திலே கருமபூமிகம்பம்-402-அந்த ஏரிக்கு மேற்கு தோட்டம்-குழி-20-அவ்விடத்திலே உக்கிராண எண்ணைக்குச் சேருகிற பூமி-கம்பம்-20-இந்தப்படி தருமம் பண்ணிக்கொடுத்தான். விஷ்ணுவர்த்தனராயன் சகைவருஷம் 1039 விளம்பிவருஷம்

சகை 1033 விஷ்ணுவர்த் தனராயன்

சைத்திரசுத்த பஞ்சமி புதவாரத்திலே [1]வேலூரிலே சென்னகேசவ நாராயணஸ்வாமி பிரதிஷ்டை பண்ணி அவருக்கு பூசை அங்கரெங்க போகத்துக்கு வேலாபுரமென்கிற கிராமமும், அந்த கிராமத்திலே சுங்க முதலானதும், அதிலே சேர்ந்திருக்கிற பன்னிரண்டு கிராமமும்-இது தவிர அப்பதுரை, தகரை இந்த இரண்டு கிராமமும், பளவினடு, மணவினடு, பன்னிரண்டு கிராமமும், கெசகூடமென்கிற கிராமமுதலான மைசனடு பெடகரை லாசண்டினடும், தேவனூர் சகல பூமிசகிதமாய் இந்த கிராம பூமிகளெல்லாம் அந்த ஸ்வாமிக்கு விட்டு, இதுதவிர வெகு திரவியங் கொடுத்து அந்தக் கோவில் இடிந்துபோனதெல்லாம் நன்ருய்க் கட்டி வைத்து தருமம் பண்ணினன். இது அந்தக் கோவிலிலே எழுதியிருந்த சிலைப்பிரதி. விஷ்ணுவர்த்தனராயன் தன்னுடைய ஸ்திரீ சாந்தலா தேவிக்கு பூமி கொடுத்து அவள் தருமேசுவர சுவாமிக்கு பூசை நைவேத்தியம் வசகைநாடு, கைணசாந்தி கிராமம் தருமங் கொடுத்த வருஷம்

சகை 1039 விஷ்ணுவர்த் தனராயன்

சகைவருஷம் 1044 சோபகிறது வருஷம் புஷ்யபசுள தசமி சோமவாரம் உத்தராயண சங்கரமணத்தில் தருமம் பண்ணிக்கொடுத்தாள்.

சகை 1044

விஷ்ணுவர்த்தனராயன் தன்னுடைய அண்ணன் சிக்கரச தேவருடனே கூட பூதானம் பண்ணினவயணம்—சகை

[1] பேளூர்.

சகை 1045 விஷ்ணுவர்த்தனராயன் வருஷம் 1045 குரோதி வருஷத்திலே புஷ்யபகுளதசமி ஆதிவாரம் உத்தராயண சங்கரமணத்திலே—எடதுறைநாடு காவேரியும், கபினியும் கூடின வேணீ சங்கமத்திலே கூடின 7 திருமுக்கூடல் அகஸ்தியேசுவர ஸ்வாமியாருக்கு பூசை நைவேத்தியம் சீர்ணோத்தாரண நைமித்தியம், எடதுறை நாடு பைதலேயுடனே கூடினது. சசலூர் இந்த கிராமம் பூமிசமக்கிறமாய் அகஸ்தியேசுவர சுவாமிக்கு தாராபூர்வகமாய் தருமதானம் பண்ணிக்கொடுத்தான்.

சகை 1050 விஷ்ணுவர்த்தனராயன் மைசூருக்கு தெற்குபுறத்திலே யிருக்கிற மகாபலேசுவரர் சாமுண்டி அம்மனுக்கு நித்திய கட்டளை, பூசை, நைவேத்தியத்துக்கு விட்ட தருமம் சாலிவாகன சகைவருஷம் 1050 சௌமியவருஷம், கன்னியாமாசம் ஹஸ்தநக்ஷத்திரம் இந்த வேளையிலே மைசூர் சீமை மளல்வாடி கிராமம் மகாபலேசுவர சாமுண்டி அம்மனுக்கு தருமதானம் பண்ணிக் கொடுத்தான். இது அந்த கோவில் தெற்கே நட்டிருக்கிற சிலா சாசனப் பிரதிதருமம்.

விஷ்ணுவர்த்தனராயன் சகை 1053 விஷ்ணுவர்த்தனராயன் செமினியதேவர் பூசை நைவேத்தியத்துக்கு மைசூர் ஏரி கீழேயிருக்கிற நஞ்சைவயல் பூமி அஞ்சு கண்டகம் விரைக்கிற பூமி. மைசூர் செயினிய ஸ்வாமிக்கு விட்டது சகைவருஷம் 1053 பரிதாபிவருஷம், பால்குன பகுள பாட்டிமை-மங்கள்வாரத்திலே பண்ணின தருமம்.

விஷ்ணுவர்த்தனன் சகை 1054 விஷ்ணுவர்த்தனராயன் பௌகெரை செயினிய ஸ்வாமி தருமத்துக்கு பௌகெரை உபகிராமத்துடனே கூட தருமம் பண்ணினவயனம் சகைவருஷம் 1054 ப்ரமாதிசவருஷம் ஆசீவச சுத்த தசமி 10 புதவாரம் பூரட்டாதி நக்ஷத்திரம் 205 இந்த நாளிலே தனக்குக் குருவாயிருக்கிற முதலாசாரிக்குக் கொடுத்த தருமம்—விஷ்ணுவர்த்தனராயன் செவளிநாடு மொறளை கிராம பிராமணளுக்கு அக்கிரகாரம் பண்ணிக்கொடுத்தது சர்வமானியமாய் விட்டு சென்னகேசவ ஸ்வாமிக்கு பூசை வைபோகத்துக்கு கெஞ்சிகெரை கிராமத்திலே சேர்ந்த சாவநதன கெரையிலே முகிளிய ஒரு விருத்தி பூமியும், மாருண்டி கெரையிலே எட்டு சலகை விரைக்கிற பூமியும், மொதளேயுனுரைட தேவன் கெரையிலே யிருக்கிற பூமியும் சர்வமானியமாய் ஸ்ரீ கேசவஸ்வாமி பாதத்திலே விட்டது. சகை 1055 ஆனந்தவருஷம் பாலசப்தமி புதவாரம் தருமம் பண்ணிக்கொடுத்தான். இந்தப்படி விஷ்ணுவர்த்தனராயன் இன்னும் அனேக தருமம் பண்ணி இராமானுசாசாரியாரிடத்திலே குருவிசுவாசத்தினலே. அநேக விசுவாசத்துடனே அநேக விஷ்ணு தேவாலயம்

இரக்ஷித்து விஷ்ணு பக்தியாய் இருந்தான், அப்படிப்பட்ட விஷ்ணு வர்த்தனராயனுடைய ஸ்திரீ லக்ஷ்மியென்கிறவளுடைய முகம் தாமரைப் பூபோலேயும், கண்கள் கருநீலப் பூபோலேயும், பவழம்போலே உதடு, முத்துக்கள்போலே பல்லுகள், சங்கம்போலே கழுத்து, மேக சாலம்போலே மயிர்கள், இன்னம் அநேக லக்ஷணங்களுடனே கூட லக்ஷ்மியைப்போலே யிருக்கிற லக்ஷ்மியென்கிற ஸ்திரீயினிடத்திலே நரசிங்கனென்கிற ஒரு பிள்ளை பிறந்து அவனை நாளொரு மேனியாய் வளர்த்து ஏழு வயதுக்குமேலே சகல வித்தையுஞ் சொல்லிவித்து விஷ்ணுவர்த்தனராயன் வெகு கீர்த்தியடைந்தான்.

நரசிங்கராயன் பட்டம் 38 சகைவருஷம் 1071

விஷ்ணுவர்த்தனராயன் மகன் நரசிங்கராயன் தலைக்காட்டிலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு தன் தகப்பனுக்கதிகமாய் வெகு புத்தியுடனே சத்தியத்திலே ஹரிச்சந்திரனைப்போலே, கீர்த்தியிலே நளமகாராசாவைப்போலே இராச தருமத்திலே பரசுராமனைப்போலே, கோபத்திலே நரசிம்மனைப்போலே, தானத்திலே கர்ணனைப்போலே, பொறுமையிலே பூமிதேவியைப்போலே இந்தப்படி வெகு நீதியுடனே யிருந்து தலைக்காடு முதலான தேசமும் கைவசம் பண்ணிக்கொண்டு கொங்கு, கர்னடகம் இந்த தேசங்கள் இரக்ஷித்துக்கொண்டு, திராவிட தேசத்திலே கப்பம் வாங்கிக்கொண்டு, துஷ்ட நிக்கிரஹம், சிஷ்ட பரிபாலனம் பண்ணிக்கொண்டு தேவப்பிராமணரை இரக்ஷித்துக் கொண்டு அநேக தருமங்கள் பண்ணி, அநேக பூதானம் பண்ணி இராச்சியம் இரக்ஷிக்கிற காலத்திலே,

அதற்குமேல் [1]துரைசமுத்திரத்திலே யிருந்துகொண்டு இராச்சியம் பரிபாலனம் பண்ணினன். நரசிங்கராயன் பூமி தானம்பண்ணின வயணம், நிறகுந்த நாட்டிலே சேர்ந்த ஒன்றுவாறமென்கிற அக்கிரகாரத்திலே ஸ்ரீ கேசவ பிரதிஷ்டையும் பண்ணி அந்த சுவாமி அங்கரெங்க வைபோகத்துக்கு

சகை 1071

பூமியும் விட்ட சகைவருஷம் 1071 பிரபவவருஷம், மாகசுத்த திரயோதசி மங்களவாரம், உரோகிணி நக்ஷத்திரம், கடக லக்கினத்தில் பட்டாபிஷேகமும் பண்ணிக்கொண்டு பூமிவிட்ட வயணம் நாற்பத்தாறு கோதானம் பண்ணி பாசி விடயத்திலே கிழக்கு கோடியிலே முன்னூறு காணி மேற்கு, தெற்கு ஏரிகோடியிலே நூறுகாணி, மலையாண்ட கெரை கீழே 605. புல்லைக் கெரை ஏரிகீழே இருபத்தைந்து காணி. பொண்டெசுவரி ஏரிகீழே முப்பது காணி சுங்கம் முதலானதும் விட்டு தருமம் பண்ணி இது தவிர சங்கறட்டணயக்கன் மகன் பொதுக் கண்ணனுக்கு ஒரு கண்டகம்

[1] துவாரசமுத்திரம்-பீளவீடு.

விரைக்கிறவயல் பரிசாரகமாளய்யனுக்கு பத்து குளகம் வயல் இந்தப் படி தருமதானம் பண்ணிக்கொடுத்தான். நரசிங்கராயன் அகோரசிவ பண்டிதருடைய நித்யநைமித்திக பூசாவிதானத்துக்கு பிதரைகெரை கீழே இருக்கிற நஞ்சைபூமி நாலுகண்டகம் விரைக்கிற பூமிதருமம் பண்ணிக்கொடுத்தான். சகை வருஷம்-1072-பிரசோற்பத்தி வருஷம் புஷ்யசுத்த பஞ்சமி சோமவாரத்திலே உத்தராயண சங்கரமண புண்ணிய காலத்திலே தருமம் பண்ணிக்கொடுத்தான்.

சகை 1072 நரசிங்க ராயன் காலம்

நரசிங்கராயன் சர்வாதிகாரி கூதண்டநாயகன் தங்கள் எசமான உத்தாரத்தின்படி யாதவகிரியிலே ஸ்ரீ திருமலேதேவர் பிரதிஷ்டைபண்ணி பூமிவிட்டவயணம்-சகை வருஷம்-1080-பிரமாதி வருஷம் சிராவணசுத்த அஷ்டமி குருவாரம் இந்த தினத்தில் பெட்டஅள்ளி யிந்தநாடு பாகே அள்ளி சரகூர்சிருமணஅள்ளி மனஅள்ளி, அளேசிந்து கெட்டம் பெட்ட அள்ளி, எரையார்குப் பெகியாதன அள்ளி-கொறவி அள்ள தகெரை கேதன அள்ளி-ரெண்டாம் சாறங்கி, பெப்பஹூர்-சறஅள்ளி இந்த பதினுை கிராமம் தாராபூர்வகமாய் தருமம் பண்ணிக்கொடுத்தான். இதுதர்மம் தொண்டனூர் கோபாலசுவாமி கோவிலிலேயிருந்து சிலாசாசனப் பிரதி

சகை 1080

நரசிங்கராயன் இராச்சியம் இரக்ஷிக்கிற காலத்திலே செக்கிராயன் லோகாம்பிகைக்குப் பிறந்த பவிய சூடாமணி யென்கிறவன் நரசிங்கராயன் உத்தாரத்தின்படி தருமம் பண்ணினவயணம் குக்குடேசுவர தருமத்துக்கு அந்தப்பமென்கிற கிராமம் சமக்கிரமாய் தருமம் பண்ணிக்கொடுத்தான். இதுதவிர தங்கள் வீட்டு தெய்வத்துக்கு கொம்பட்புரத்து திப்பையன் சுங்கத்திலே பாக்கு பொதிக்கு பணம் வ, உப்பு பொதிக்கு வள்ளம் க மஞ்சள்பொதிக்கு சேர் க மிளகாய் பொதிக்கு வள்ளம் க [1]வெத்திலே பொதிக்கு பணம் வ, இந்தப்படி வாங்கிக்கொண்டு கோவில் தருமம் நடக்கும் படியாய் தருமம் பண்ணின சகைவருஷம் 1081 விக்கிரம வருஷம் மாகசுத்த சதுர்தசி சுக்கிரவாரத்திலே உத்தராயணத்திலே இந்த தருமம் பண்ணிக்கொடுத்து இராசாவுக்கு வெகு பிரீதியாயிருந்தான்.

1081

நரசிங்கராயன் இராச்சிய பரிபாலனம் பண்ணுகையிலே அவனுக்குச் சினேகிதனுயிருக்கிற பெட்டய்யனென்கிறவன் இராசா கையில் அப்பணே வாங்கிக்கொண்டு பெட்டேசுவர தேவருக்கு பூசை தருமம் நைமித்தியம் கன்னக்

சகை 1082

---

1 வெற்றிலே.

கெரை என்கிற கிராமம் பெட்டேசுவரபுரமென்று பேர்வைத்து தருமம் பண்ணிக்கொடுத்தான். சகைவருஷம் 1082 விஷுவருஷம் உத்தராயணம் மகரமாசத்திலே சோமவாரத்திலே தருமம் பண்ணிக் கொடுத்தான்.

நரசிங்கராயன் தனக்கு மிகவும் பிரீதியாயிருக்கிற பவியசூடாமணி என்கிறவனுக்கு தருமத்துக்கு பூமிகொடுத்து அந்த பவியசூடாமணி யென்கிறவன் இராசாவினுடைய உத்தாரப்படிக்கு குக்குடேசுவர சுவாமிக்கு பூசை நைமித்தியம் எப்பானே கிராமத்திலே சேர்ந்த மேடன் அள்ளியிலே தோட்டப்பயிர் செய்கிற பூமிகண்டகம்-4. தருமம் பண்ணிக் கொடுத்த சகைவருஷம் 1084. சுபானு வருஷம் சைத்திர சுத்த பஞ்சமியிலே தருமம் பண்ணிக் கொடுத்தான். அந்த வருஷத்திலே நரசிங்கராயன் அரெகெரை என்கிற கிராமம் அக்கிரகாரம் பண்ணி ஸ்ரீ மல்லினாத பிரதிஷ்டையும் பண்ணி-அந்த சுவாமி பூசை நைவேத்தியத்துக்கும் சீரணோத்தாரத்துக்கும் புடகரை நாடு விஷயத்திலே கெணங்கூறும் சர்வ மானியமாய் தாராபூர்வகமாய் தருமம் பண்ணிக் கொடுத்தான். சகை வருஷம் 1084. சுபானு வருஷம், மாகமாசம். சுக்கிலபக்ஷம் ஏகாதெசி சோமவாரம் தனிஷ்டா நக்ஷத்திரத்தில் தருமம் பண்ணிக் கொடுத்தான்.

சகை.1084

சகை-1084

நரசிங்கராயன் துரை[1] சமுத்திரத்திலே யிருந்துகொண்டு இராச்சியம் இரக்ஷிக்கையில் அவன் மந்திரி மாதணன் தெண்டநாயகன் மகன் விஷ்ணுதெண்ட நாயகன் தங்கள் இராசர் நரசிங்கராயரண்டை உத்தாரம் வாங்கிக்கொண்டு பௌகுளம் கைலாசேசுவர அங்கரெங்க பூசாவிதானத்துக்கு தருமம் பண்ணிக் கொடுத்தது, சகை வருஷம் 1085 தாருண வருஷம் புஷ்யபகுளபாட்டிமை புதவாரம் உத்தராயண சங்கிராந்தி புண்ணிய காலத்திலே பௌகுளம் புஞ்சைபூமி காணி 420. இந்த நானூற்றிருபது பூமியுடனே தருமதானம் பண்ணிக்கொடுத்தான். இந்த சாசனம் பௌகுளம் கைலாசேசுவரர் கோவிலிலே கல்லிலே எழுதியிருந்தது.

சகை.1085

நரசிங்கராயன் மைசூர் ஒபளிக்கல்லய்யன் சிவாலயத்துக்கு விட்ட பூமிசாசனம் மந்திரி கல்லெய்யன் இராசா உத்தாரப்படிக்கு ஸ்ரீ ராமனாத தேவாலயமும் சோமனாதேசுவர சிவாலயமும் கட்டுவித்து அந்தக் கோயில் அங்கரெங்க சீர்ணோத்தார பூசை நைமித்தியம் பெட்டுறவாடி கிராமம் தருமதானம் பண்ணிவிட்டான். சகை வருஷம் 1093. நந்தன வருஷம் புஷ்ய சுத்தபஞ்சமி

சகை-1093

---

1 துவரை

ஆதித்யவாரம் உத்தராயண சங்கரமணத்திலே அந்த கிராமம் ஏரி கீழே முப்பது குளகம் விரைக்கிற பூமிவிட்டு தருமதானம் பண்ணினன்.

நரசிங்கராயன் தன்னுடைய வீட்டிலே சாஸ்திரம் சொல்லுகிற கோவிந்தேசுவரன், விநயகப்பட்டன் இவர்களிரண்டு பேருக்கும் பத்து குளகம் விரைக்கிற பூமி கொடுத்தது. அந்த பூமியை அவர்கள் நாகேசுவர தேவதைக்கு தருமம் பண்ணிக் கொடுத்தது சகைவருஷம் 1094 விசய வருஷம் சைத்திர சுத்தநவமி பானுவாரம் புனர்வசு நக்ஷத்திரத்திலே தருமம் பண்ணிக்கொடுத்தார்கள். இது சொறவங்கலம் நாகேசுவரசுவாமி சாசனப் பிரதி. இந்தப் படி இன்னம் அநேக தருமங்கள் பண்ணி கொங்கு கர்னுடகதேசம் இரக்ஷித்து கேரளம், பாண்டிய தேசம், சோள தேசம், ஆந்திரதேசம், வராடமயிந்து. இதுமட்டுக்கும் யுத்தம் பண்ணி கப்பம் வாங்கிக்கொண்டு இராசாதிராசனென்று கீர்த்தியை அடைந்து வீரநரசிம்மனென்று பிரசித்தமாய் சய வருஷத்திலே சித்திரை மாதம் இரங்கனயகருடைய பாதாரவிந்தத்தை யடைந்தான். அவன் ஆண்ட வருஷம் 27. அதன் பிறகு அவனுடைய ஸ்திரீ வலதேவியினிடத்திலே பிறந்த வல்லாள ராயனுக்கு பட்டமாச்சுது.

சகை-1094

வல்லாளராயன் தலைக்காட்டிலே சயவருஷத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு சந்திரமௌலி என்கிற மந்திரியுடனே கொங்கு நங்கவாடி முதலான பாளையக்காரர்களுக்கு சிம்மம்போலே யிருந்துகொண்டு அநேக யானை குதிரை காலாள் சைனியங்களுடனே கூட கேரள தேசத்துக்குப் போய் அந்த ராசாவுடனே சண்டை பண்ணி கேரளதேசமெல்லாம் கொள்ளை பண்ணி அதற்குமேல் அவன் கையிலே வெகு திரவியம் வாங்கிக்கொண்டு பாண்டிய தேசத்து............ ...............நாயகன் கையிலே கப்பம் வாங்கிக்கொண்டு அதற்குமேலே விசயபுர...........................இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு, கெவுடர் பாளையக்காரர்கள் கையிலே கப்பம் வாங்கிக்கொண்டு அங்கேயிருந்து சோளராச்சியம் இரக்ஷித்து கொங்கண தேசத்து பாளையக்காரருடனே வெகு யுத்தம் பண்ணி அவ்விடம் போனவிடத்திலே தங்கள் சனங்களுக்கு வியாதி உபத்திரவங்கள் உண்டாய் அங்கேயிருந்து பட்டணத்துக்கு வந்துவிட்டான்.

வல்லாளராயன் பட்டம் 39 சகை வருஷம் 1095

அதன்பிறகு வல்லாளராயன் அநேக தருமங்கள் பண்ணி அநேக சாஸ்திரம் விசாரித்து தரும சாத்திரப்படிக்கு இராச்சியம் இரக்ஷித்து தங்கள் வம்சத்திலே உண்டாயிருக்கிற இராசாக்களுக்கு அநேக பூமிகள் விட்டு பூமிதருமம் பண்ணினன்.

வல்லாளராயன் காலத்திலே குரிக்கி நாடு மொள்ளென அள்ளிக் கொள்ளடி சவுக்க கெவுடன் மகன் அறன் கெவுடன்
சகை 1095 தன்னுடைய கிராமத்துக்கு தெற்கு ஏரி கீழ் அருண சமுத்ரமென்கிற கிராமம் கட்டி தேவாலயமுங் கட்டுவித்து இராசா உத்தாரப்படி புஞ்சை பூமி வள்ளம் 800 ஏரி கீழ் நெல்லு பயிர் செய்கிற பூமி பத்து குளகம் விறைக்கிற பூமியும் அந்த ஈசுவரனுக்கு தருமம் பண்ணிக்கொடுத்தான். சகைவருஷம் 1095 சயவருஷம் புஷ்யசுத்ததிதிகை புதவாரம் தரும சாசனம் பண்ணினன்.

வல்லாளராயன் சிவசத்தி பண்டிதனுக்கு காளேசுவர தேவஸ்தானமும் அந்த கோவிலுக்கு பூசை நைவேத்தியத்துக்கு
சகை 1096 கொறவங்கல் ஒபளி செக்கென அள்ளி ஏரி கீழே மூணு கண்டகம் பதினைந்து குளகம் விரைக்கிற பூமியும் தானம் பண்ணிக்கொடுத்தது சகைவருஷம் 1096 மன்மதவருஷம் சேஷ்டபகுள பஞ்சமி சுக்கிரவாரத்திலே தருமம் பண்ணிக் கொடுத்தான்.

வல்லாளராயன் மந்திரி சந்திரமௌலி என்கிறவன் தன்னுடைய எசமானன் உத்தாரத்தின்படி பௌகுளம் சின்னேசு
சகை 1004 வர சுவாமிக்கு பொம்மன அள்ளி யென்கிற கிராமம் தாராபூர்வகமாய் தருமம் பண்ணிக்கொடுத்தது சகைவருஷம் 1004, சோபகிருதுவருஷம் புஷ்யசுத்த தசமி பானுவாரத்திலே உத்தராயண புண்யகாலத்திலே தருமம் பண்ணிக்கொடுத்தான்.

வல்லாளராயன் தளவாய் கேசவேசுவர னென்கிறவன் தங்கள் இராசா உத்தாரப்படிக்கு நீர்கொத்தநாடு, பஞ்சவாடி
சகை 1301 பௌகலி என்கிற கிராமம் கேசவ சமுத்திர மென்று பேர்வைத்து லக்ஷ்மி சமுத்திரமென்கிற ஏரி கட்டிவைத்து ஸ்ரீ கேசவஸ்வாமிக்கு தருமம்பண்ணின சகைவருஷம் 1131 பிரமோதூதவருஷம் பூஷ்ய சுத்தசப்தமி சோமவாரம் உத்தராயணத்தில் அந்த கிராமத்திலே உண்டான சகல பூமியும் தருமம் பண்ணிக்கொடுத்தான்.

வல்லாளராயனுடைய மகாபிரதானி ஒன்னண்ணன் மகன் காமய்யதண்ணயகன், விரூபாக்ஷ ஒசதுற்கத்திலே
சகை 1154 யிருந்து இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு சம்பிகை யென்கிற கிராமம் வித்துவானயிருக்கிற சிங்கப்பட்டருக்கு தருமம் தாராபூர்வகமாய் சருவமானியம் பண்ணிக்கொடுத்தான். சகைவருஷம் 1154 விசயவருஷம் ஆசிவச்சுத்த திருதியை குருவாரம் இந்த நாளில் தாராபூர்வகமாய் தருமம் பண்ணிக்கொடுத்தான்.

இந்தப்படி இன்னம் அநேக தருமங்கள் பண்ணி யுத்தத்திலே பின்வாங்காமல் அநேக பாளையக்காரரை கெருவபங்கம் பண்ணி வெகு ராசாக்கள் பாளையக்காரர் கையிலே கப்பம் வாங்கிக்கொண்டு இரக்ஷிக்கையில் அவனுடைய ஸ்திரீ வித்திசைவாணி லோகாம்பையினிடத்திலே அநேக புத்தியுடனேயும், ரூபத்திலே மன்மதனைப் போலேயும், ஒரு புத்திரன் பிறந்து, அவனுக்கு சோமேசுவரனென்று பேர் வைத்து, அவனுக்கு சகல வித்தையும் சொல்லிவைத்து, அவனை நாளொரு மேனியாய் வளர்த்தான். அவன் துவரை சமுத்திரத்திலே பட்டம் கட்டிக்கொண்டு, கொங்க கர்னடக தேசம் இரக்ஷித்து தேவதைகள் கோவில்கள் நன்றாய் கட்டுவித்து அநேகம் பதினாறு தானம்பண்ணி கைலாசத்தை அடைந்தான்.

சோமேசுவரன் பட்டம் 40

அவன் மகன் நரசிங்கராயன் துரை சமுத்திரத்திலே (சகை-1205) இராச்சியம் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு மந்திரிபெருமான் தெண்டநாயக்கன் தளவாய் பிர்ம சமூப்தி இவர்களுடனே கூட இராச்சியம் இரக்ஷித்தான். எப்படியென்றால் அவன் ரூபத்திலே மன்மதனைப் போலே, பாக்கியத்திலே குபேரனைப் போலே, சயத்திலே பரசுராமனைப்போலே, தானங் கொடுக்கிறதிலே கற்பகவிருக்ஷத்தைப் போலே, சாந்தத்திலே தருமராசாவைப் போலே, இராச்சியம் இரக்ஷிக்கிறதிலே இராமனைப் போலே, பூதானத்திலே பலிசக்கிரவர்த்தியைப் போலே, கோபத்திலே யீசுவரனைப் போலே யிந்தப்படி அநேக குணங்களுடனே கூட, கசதுரகபதாதிகளுடனேயும், அநேக ஆயுதங்களுடனேயும் புறப்பட்டு கொங்க தேசத்துக்குப் போய் அந்த பாளையக்காரர் கையிலே கப்பம் வாங்கிக்கொண்டு, கேரள தேசத்தில் வெகுயுத்தம் பண்ணி, கேரள ராசா சேனைகளை யெல்லாம் முறியடித்து அதற்குமேல் கேரள ராமராயனுக்கும், இந்த ராசாவுக்கும் சினேகமாய் அவனுடைய பெலனையுங் கூட்டிக்கொண்டு பாண்டிய, சோழ, திராவிட தேசங்களிலே கப்பம் வாங்கிக்கொண்டு கலிங்கதேச மட்டுக்கும் போய் அந்த ராசாசேனைகளை சின்ன பின்னமாய் அடித்து அதற்கு மேல் வடக்கேயிருந்து வந்த 50 துலுக்கர் சேனைகளோடே யுத்தம் பண்ணி செயித்து, கொங்கண தேசத்து வழியாய் வந்து, அங்கேயும் கப்பம் வாங்கிக்கொண்டு துவரை சமுத்திரத்துக்கு வந்து அநேக பூதானம், கோதானம், கன்னிகாதானம் முதலாய பண்ணி, அநேக தேவாலயங்கள் கட்டி அவைகளுக்கு பூசை முதலானத்துக்கும், நடக்க வேண்டியத்துக்கும் பூதானம் பண்ணி முன்னாலே விஷ்ணுவர்த்தன ராயன் நாளிலே நடந்த தருமங்களை பழயபடி நடப்பித்து அதற்கு

வீரநரசிங்க ராயன் பட்டம் 41 சகை 1205

வீரநரசிங்க ராயர் சகை.1206

மேல் வீரநரசிங்கராயன் மந்திரிபெருமான் தெண்ட நாயக்கன் தங்கள் இராசா உத்தாரப்படி பெள்ளூர் ஸ்ரீ மாதவதேவருக்கும், ஸ்ரீ ராமகிருஷ்ணஸ்வாமிக்கும், ஸ்ரீ வரதஅள்ளாளநாதஸ்வாமியாருக்கும் அமிர்தபடிகை அங்கபோகங்களுக்கும் பெள்ளூரிலேயிருக்கிற தொண்ணூற்றுரு பிராமணுளுக்கும் அந்த கிராமம் ஏழு பங்கு செய்து ஆறுபங்கு பிராமணருக்கு விட்டு ஒருபங்கு அந்த சுவாமிக்கு விட்டு, இதுதவிர அந்த கோவில்கள் ரதோச்சவம் தீபோற்சவம் முதலானவை போகத்துக்கு அந்த கிருமம் கா(ல்)வாய் பாய்ச்சலிலே யிருக்கிற பெட்டதகொட்டை பில்ல பௌகுந்த மதிப்பூரு இதிலே சேர்ந்த கிராமங்கள் கும்மன அள்ளி, அர்த்தகெவுடன அள்ளி, பெகூர்கூத்தன அள்ளி, காச்சென அள்ளி, பெரியபெடன அள்ளி, சின்னபெடன அள்ளி, அஞ்சென அள்ளி, அணை அள்ளி, இராமகெவுடன அள்ளி, குடிதருகின் கோட்டை கித்தவகெட்டம் சிவன அள்ளி: கிரிகெரைக்கு கிழக்கு, அண்ணகரைக்கு மேலேயிருக்கிற வயல்களும் யிந்த பூமியெல்லாம் மகாசெனங்கள் தாராபூர்வகம் பண்ணிக்கொண்டு கோவிலுக்கு தருமம் பண்ணின சகை வருஷம் 1206. பார்த்திப வருஷம் 19. கார்த்திகை சுத்த பாட்டிமை ஆதித்யவாரம் இந்த தினத்திலே தருமம் பண்ணிக்கொடுத்தான்.

வீரநரசிங்க ராயன் தருமம்

சகை 1207

வீரநரசிங்கராயன் விக்கினசித்தமென்கிற கிராமத்திலே [1]கெச்சுவாமி நரசிங்கசுவாமி, கோபாலசுவாமி இவர்கள் பிரதிஷ்டை பண்ணி இந்த சுவாமிகளுக்கு அங்கரெங்க வைபோக உற்சவத்துக்கும், சீரணோத்தாரத்துக்கும் கன்னில்வாடி என்கிற கிராமம் சர்வமானியமாய் தருமம்பண்ணின சகைவருஷம் 1207 வியவருஷம் 20 பால்குனசுத்த பௌர்ணமி அரைகிரஹணத்தில் கன்னில்வாடி என்கிற கிருமம் தாராபூர்வகமாய் தருமம் பண்ணிக் கொடுத்தான்.

வீரநரசிங்கராயர் காலத்தில் சகை 1210

வீரநரசிங்கராயன் பிரதிஷ்டை பண்ணியிருக்கிற பிரசன்ன கேசவஸ்வாமி, கோபாலசுவாமி நரசிங்கசுவாமி பிரதிஷ்டை பண்ணியிருக்கிற விடத்திலே யிந்த ராசா தளவாய் பிரம சமூபதியானவன் சதாசிவசுவாமி பிரதிஷ்டை பண்ணி நுக்கி அள்ளியிலே இரண்டு விருத்தி அந்தலூர் மகாசெனங்கள் கையிலே வாங்கிவிட்டது. விருத்தி 6 ஆக நுக்கி அள்ளியிலே விட்ட விருத்தி 8. இதுதவிர பிர்மசமூடெணயகன் அந்த கோவில் பூசைபண்ணுகிற மஞ்சண்ணனுக்கு கொடுத்த வயல் பூமி கம்பம் 200. புஞ்சை பூமி கம்பம் 400. உங்குகுர கெறையிலே யிருக்

[1] கேசவ.

கிற மகாசனங்கள் கையிலே சித்தாய வரி வாங்குகிற விராகன் 95. நுக்கி அள்ளி, அங்கன அள்ளி, சோமன அள்ளி, தேவ அள்ளி, கோசலகெறை கெவுதரி அள்ளி, இந்த கிராமங்களிலே இருக்கிற தோட்டங்கள் சகிதமாய் ஆருகெறை கிழக்கேயிருக்கிற தோட்டம் கம்பம்-260. சௌவுந்தர அள்ளி தோட்டம், அந்த மகா சனங்கள் கொடுத்தார்கள். ஏரிகெறை கீழேயிருக்கிற வயல் கம்பம் 1200,[1] கிருகெட்டை கீழேயிருக்கிற வயல் கம்பம் 100, புஞ்சைகாடு கம்பம் 13000. இந்தப்படி தருமம் பண்ணி சவுடேசுவர சுவாமிக்குக் கொடுத்தது. பணத்திக்கினகெறை சித்தாவரி விராகன் 95, அந்தகெறை கீழேவயல் கம்பம் 20, புஞ்சைபூமி கம்பம் 100, இந்தப்படி வெகு பூமிகள் விட்டு அந்தந்த அக்கிரகாரங்கள் பூமி எப்போதும் போலே நடப்பிவித்தான். இந்த தருமம் சகை-1210 விரோதி வருஷம்23, பால்குண சுத்த பூர்ணமி ஆதிவாரத்தில் பண்ணின தருமசாசனம். இது நுக்கிஅள்ளி சதாசிவஸ்வாமி தேவஸ்தானத்திலே யிருந்த சிலாசாசனப் பிரதி.

ஓயிசளவீர நரசிங்கராயர்

நரசிங்கராயன் இராச்சிய பரிபாலனம் பண்ணுகிற காலத்திலே [2]பொமண(த)ண்டணுயக்கன் என்கிற சேனுதிபதி சோமனுதபுரமென்கிற நுக்கி அள்ளியிலே சத்திரம் போட்டு அந்த சத்திரத்திலே ஒரு தினத்துக்குப் பன்னிரண்டு பிராமணுள் போசனம் பண்ணும்படியாய் திட்டம் பண்ணி நுக்கிஅள்ளி, ஏரி கீழேயிருக்கிற தான் கட்டின கொட்டிகெறை கீழே வயல்பூமி கம்பம் 400, பீசவரி ஏழுசலகை. அந்த பூமிக்கு உண்டான கிரயம் கொடுத்து அந்த நுக்கி அள்ளியிலே யிருக்கிற பசவண்ணன் கையிலே தாராபூர்வகமாய் தானம் பண்ணிக் கொடுத்தான். அந்தப்படி அந்த பசவண்ணன் பிராமண சந்தர்ப்பணே நடப்பித்துக் கொண்டுவந்தான்.....................சகை வருஷம் 1235 ஆனந்த வருஷம் கார்த்திகை சுத்த பாட்டிமை சோமவாரத்தில் தருமதானம். இந்த சாசனம் சென்னராயஸ்வாமி கோவில் சாசனப் பிரதி.

சகை-1235 விர ஓயிசள நரசிங்க ராயர் காலத்திலே

## ஹரிஹரராயன் வம்சம்

சந்திர வம்சத்திலே எது என்கிற இராசா உண்டானுன். அந்த எது வம்சத்திலே அனேக இராசாக்கள் உண்டானுர்கள். அந்த ராசாக்களிலே சங்கமனென்கிற இராசா உண்டானுன். அவன் தக்ஷிண தேசம் துங்கபத்திரா தீரத்துக்கு வந்து அவ்விடத்திலே யிருந்துகொண்டு கெசம், துரகம், இரதம், பதாதி இப்படி சதுரங்க சேனைகளுடனே தக்ஷிண

ஹரிஹர ராயர் வம்சம்

1 மாதப்பகெறை கீழே இருக்கிற வயல்கம்பம் 2 பொம்மண்ண தண்டநாயக்கன்(பேர்மருவியது)

தேசங்களையெல்லாம் செயம் பண்ணி இராச்சியங்கள் கைவசம் பண்ணி வெகுசேனைகளுடனே யிருந்தான். அவன் மகன் புக்கராய னென்கிறவன்—ஹரிஹரன், கம்பராயன், மாருபராயன், முத்துப ராயன் இப்படி ஐந்து பிள்ளைகள் உண்டானார்பள். இந்த ஐந்துபேர் களிலே புக்கராயனென்கிறவன் வெகு புத்தியுடனேயும் பராக்கிரமத் துடனேயும், ரூபத்துடனேயும் இருந்தான். எப்படியென்றால் பஞ்ச பாண்டவர்களிலே அர்ச்சுனன் எப்படியோ அப்படி யுத்தத்தில் பயப்படாமல் செயம் பண்ணுகிறவன். துங்கபத்திரா தீரத்திலேயிருந்த அநேக தேசங்கள் செயம் பண்ணினபடியினாலே அந்த ஸ்தலத்திலே ஒரு பட்டணம் அநேக தெருவீதிகளுடனேயும் அநேக உப்பரிகை களுடனேயும் ஹேமகூடத்துக்குச் சமானமாயிருக்கிற கோட்டைகள், அந்த துங்கபத்திரா தீரமாயிருக்கிற அகழிகளும் அநேக இராசாக்கள் அரமனைகளும் இப்படி அநேக அலங்காரத்தினாலேயும் அநேக பாக்கியங்களினாலேயும் அலங்காரமா யிருக்கிற படியினாலே சோபாலக்ஷ்மி நாட்டியம் செய்கிறாப் போலே யிருக்கிற அநேக செயத்தை அடைந்து இருக்கிற விசயநகரி பட்டணத்திலேயிருந்து இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு இருக்கிறகாலத்திலே புத்திரன் நிமித்தியம் சிவபூசை விஷ்ணுபூசைகள் பண்ணி அதுக்குமேல் அவனுடையஸ்திரீ கெவுரிஅம்பிகையினிடத்திலே ஈசுவரியினிடத்திலே சுப்பிரமணியன் உண்டானாப்போலே ஒரு புத்தி ரன் பிறந்து ஹரிஹர உபாசனையினாலே உண்டானபடியினாலே அவ னுக்கு ஹரிஹரராயனென்று பேர்வைத்து அவன் சகல வித்தையுந் தெரிந்துகொண்டு வெகு பிரபலமானான். அவனுக்கு ஹரிஹரபுக்கராய னென்னும் பேர். அந்த ஹரிஹரராயன் அந்த விசயநகரி பட்டணத் திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு ஆனை, குதிரை முதலான சதுரங்க சேனைகளுடனே கூட அநேக தேசங்கள் செயம்பண்ணி பதினெட்டு தீவுகள் செயம் செய்து அநேக தேசங்களிலே கப்பம் வாங்கிக் கொண்டு தன்னுடைய ஸ்வதேசத்திலே அநேக தருமங்கள் செய்தான்.

ஹரிஹரரா யன் வம்சம்

ஹரிஹரரா யன் பட்டம் 42 சகை

அதின்பிறகு அவனுடைய மகன் தேவராயனுக்கு பட்டாபி ஷேகம் பண்ணினான். அந்த தேவராயனுக்குத் தம்பி ஹரிஹரராய னென்று வெகு பராக்கிரமத்துடனேயும் அலங்காரத்துடனேயும் பிறந்தான்.

விசயபட்டணத்திலே தேவராயனானவன் நவரத்தினத்தினாலே அலங்காரமாயிருக்கிற சிங்காசனத்திலே யிருந்து பட் டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இராச்சிய பரிபாலனத் துக்கு கர்த்தனானது சாலிவாஹன சகைவருஷம் 1270 விரோதிவருஷம் கார்த்திகைமாதம் கிருஷ்ணபக்ஷம் தசமியிலே சுக்கிரவாரம் உத்திராபாத்திரா நக்ஷத்திரம்

தேவராயன் பட்டம் 43 சகை வருஷம் 1270

பிரீதி யோகம் பவகரணம் இப்படிப்பட்ட சுபதினத்திலே இராசாதி ராச ராசபரமேசுவர ஸ்ரீ வீரபிரதாப தேவராயனென்று கீர்த்தியை அடைந்து கர்னுட, சேர, சோழ, பாண்டிய, கேரள முதலான இராச்சியங்களிலே கப்பம்வாங்கிக்கொண்டு தருமசாஸ்திரப் பிரகாரம் இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு அநேக பூதானம், கோதானம், கன்னிகாதானம் பண்ணினுன். தேவராயன் பட்டாபிஷேக சமயத்திலே பூதானம் பண்ணின வயணம் தேவராசபுரமென்கிற அக்கிரகாரம் முப்பத்திரெண்டு வீட்டுடனே கட்டிவைத்தது. அதிலே நல்ல வித்துவானுயிருக்கிற பிராமணுளுக்கு முப்பத்திரெண்டு விருத்தி உண்டுபண்ணி, அந்தகிராமம் சர்வமானியமாய் சஹிரண்ணிய உதகத்துடனே தாராபூர்வகமாய் தருமதானம் பண்ணிக்கொடுத்தான். அதன்பிறகு ஹரிஹரபுக்கராயன் மகன் ஹரிஹரராயன் சகைவருஷம்.(?)வருஷத்திலே விசயநகரி பட்டணத்திலே நவரத்தின சிங்காசனத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு குண்டதெண்டனுதனென்கிற தளபதியுடனே கூட இராச்சிய பரிபாலனம் வெகு நீதியுடனே இரக்ஷித்தான். அது எப்படியென்ருல், பராக்கிரமத்திலே தேவேந்திரனைப்போலே, செயத்திலே அர்ச்சுனனைப்போலே, உக்கிரபராக்கிரமத்திலே பிரளய காலருத்திரனைப் போலே, தானத்திலே பரசுராமனைப் போலே, பாக்கியத்திலே குபேரனைப் போலே, தயவிலேயும், இராச்சிய நீதியிலேயும் தசரதராமனைப் போலே, சாந்தத்திலே வருணனைப் போலே, ரூபத்திலே மன்மதனைப் போலே இப்படி அநேக குணங்களுடனே கூட சாக்ஷாத் ஹரியைப் போலேயிருந்து இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு இருக்கிற காலத்திலே அவருடைய மந்திரி குண்டதெண்ட நாயகனென்கிறவன் தசரதனிடத்திலே சுமந்திரனென்கிற மந்திரி யெப்படியோ அப்படி அநேக சதுரங்க சேனைகளுடனே அநேக ஆயுதங்களுடனே தங்கள் இராச உத்தாரத்தின்படியே பூலோகத்திலே யிருக்கிற இராசாக்களை செயம் பண்ணவேணுமென்று புறப்பட்டு உத்திர திக்குக்குப் போய் கலிங்க தேசம், அங்கதேசம், வங்கதேசம், காம்போசதேசம், சிம்மளதேசம், துளுவதேசம், மகத, மாளவ, [1]வராட இந்ததேசங்களிலே செயம் பண்ணி கப்பம் வாங்கிக்கொண்டு அதற்குமேல் பாரசீக தேசம் துருஷ்க தேசத்திலே வெகுநாள் யுத்தம் பண்ணி துருஷ்கரை யெல்லாம் சின்னுபின்னமாய் அடித்து அவ்விடத்திலே யிருக்கிற இராசாக்கள் கையிலே வெகுதிரவியம் வாங்கிக்கொண்டு அந்த தேசத்திலே செயஸ்தம்பம் நட்டு, அங்கேயிருந்து சைந்தவதேசம், குச்சரதேசம் செயம் பண்ணிக்கொண்டு இந்துதேச இராசாவை இரக்ஷித்து, கொங்கண, மலேயாள, கேரள,

தேவராயன் தருமம் சகை ௵

வீர ஹரிஹர ராயன் பட்டம் 44

வீர ஹரிஹர ராயன்

[1] மராட

பாண்டியதேசம் செயம் பண்ணி செயஸ்தம்பம் நட்டு சோள திராவிட தேசம் முதலான தேசங்களிலே வெகுதிரவியம், வாகனம், ஆயுதம் முதலானதும் கொண்டுவந்து மகாராசாதிராச ராசபரமேசுவரனென்கிற இன்னம் அநேக பிருதாங்கிதனு யிருக்கிற வீரஹரிஹரராயனுடைய மந்திரியானவன் வெகு கீர்த்தியை அடைந்தான். அப்போது ஹரிஹரராயன் வெகு சந்தோஷப்பட்டு அவனுக்கு வீர குண்(ட)தண்ட மகாராச முப்தியென்று [1]கிதாபுநாமம் கொடுத்து லோகத்திலே இந்த ராசாவுக்கு சமானமாய் இராச்சியம் நீதியுடனே விசாரிக்கமாட்டானென்று இராசா பேரிலே பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர இந்த சதுர்வர்ண சாதிகளும் வெகு சந்தோஷப்பட்டு இருந்தார்கள். அவனுக்கு விஷ்ணுதேவ மகாராயன்............

வீர ஹரிஹர ராயன் தருமம் சகை 1303

வீர ஹரிஹரராயன் ஒயிசள தேசத்திலே சாந்தி கிராமத்திலே சேர்ந்திருக்கிற சின்ன கடலூர் கிராமம் அல்ல அள்ளி உடனே கூடியிருக்கிற பெரிய கடலூர் என்கிற கிராமத்தை சர்வமானியமாய் அந்த ஊரிலே யிருக்கிற சகல சாஸ்திரம் தெரிந்திருக்கிற சாமவேதி யக்கிய நாராயணன், முகுளபட்டன், கவிநாதன், சோமயாசி இவர்கள் வழியாய் பன்னிரண்டு ஸ்வாஸ்தியம் பண்ணி சகை 1303 துன்மதி வருஷம் மார்கசிர சுத்த சுக்கிலபக்ஷம், ஏகாதசி தினத்திலே பிராமணுளுக்கும், சஹிரண்ணிய உதகதாரா பூர்வகமாய் தானம் பண்ணிக்கொடுத்தான். அந்த கிராமத்துக்கு ஹரிஹரராசபுரமென்று பேர் வைத்து கீர்த்தியை அடைந்தான்.

விஷ்ணுதேவ மகாராயன் பட்டம் 45

விஷ்ணுதேவமகாராயன் விசயநகரி பட்டணத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு தெலுங்குதேசம், கர்னுடக தேசம் வெகு நீதியுடனே இரக்ஷித்துக்கொண்டு அநேக விஷ்ணு பிரதிஷ்டை உண்டுபண்ணி அந்தந்த கோவில்களுக்கு அங்கரெங்க வைபோகத்துக்கு பூமிகள் விட்டு கொங்கண, மலையாள, கொங்கதேசம் முதலானதும் கப்பம் வாங்கிக்கொண்டு கெசதானம் முதலானதும் பண்ணி சூரியனைப்போலே வெகு கீர்த்தியை அடைந்து ஸ்வர்க்கத்தை அடைந்தான். அவனுக்கு மல்லிகார்ச்சுனனென்றும், இம்மட்டி தேவராயனென்றும் இரண்டு பேரப்பிள்ளைகள் உண்டானுர்கள்.

மல்லிகாற்சுன ராயன் பட்டம் 46

மல்லிகார்ச்சுனராயன் விசயநகரி பட்டணத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு தன் தம்பி இம்மடிதேவராயனுடனே கூடவும் தளவாய் திம்மண்ண நாயக்கனுடனே கூடவும் ஆந்திரதேசம், கர்னுடகதேசம் இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு இதுக்கு தக்ஷிணமாயிருக்

[1] கிதாப்-உருதுமொழி.

கிற தேசங்கள் செயம்செய்து கப்பம் வாங்கிக்கொண்டு வரவேண்டு மென்று அநேக ஆனை குதிரை முதலான சேனைகளுடனேகூட கேரள தேசத்துக்குப் போய் கேரள ராசாவுடனே சண்டை பண்ணி அங்கே திரவிய பூஷண முதலானது வாங்கிக்கொண்டு திரும்பி வித்யா நகரி பட்டணத்துக்கு வந்துவிட்டான்.

அதின்பிறகு இராச்சியங்களிலே வெகுநீதியுடனே இரக்ஷித்து அநேகம் தேவாலயம் பிரமாலயம் கோவில்கள் கட்டி தனக்கு இஷ்ட தேவதையாயிருக்கிற தலைக்காடு மல்லிகார்ச்சுன ஸ்வாமிக்கு அங்க ரெங்க வைபோகத்துக்கு வெகு திரவியங்களும் பூமியும் கொடுத்து அநேக தருமங்கள் பண்ணினன். மல்லிகார்ச்சுனராயன் மந்திரி திம்மண்ணதண்ட நாயகன் ஸ்ரீபச்சிம ரங்கசுவாமிக்கு மகாரதம் கட்டிவைத்தான். சகை வருஷம் 1376 யுவ வருஷம் புஷ்யசுத்த ஏகாதசி சுக்கிரவாரத்தில் ஸ்ரீ ரங்கநாயக சுவாமிக்கு தேர் கட்டி முடிந்தது. தேர் உச்சவமும் பண்ணிவைத்தான். அதின் பிறகு சகை வருஷம் 1377 தாது வருஷம் சேஷ்ட சுத்த ஏகாதசி யிலே லோகித வம்சத்திலே உண்டாயிருக்கிற திம்மண்ணதண்டநாயகர் பட்டம் ஸ்திரீ ரங்காயம்மாள் அவன் ஸ்ரீபச்சிமரங்கசுவாமி அங்க வைபோகத்துக்கு குருவங்க நாட்டிலே ஒன்னேமடுவு ஸ்தலத்திலே ரங்கபுரமென்கிற கிராமம் சமக்கிரமாய் தருமதானம் பண்ணிக் கொடுத்தான். அந்த திம்மண்ணதண்ட நாயகன் கோவில் நன்ருய் கட்டி வைத்து ரங்கசுவாமிக்கு அனேகம் பூமிதானம் பண்ணியிருக் கிருன்.

மல்லிகார்ச்சுனராயன் காலத்தில் தருமம்-சகை 1377

## வீரநரசிங்கராயர் வம்சம்

ஸ்ரீமச் சந்திர வம்சத்திலே எது வென்கிற இராசா உண்டா னன். அந்த எது வம்சத்திலே அநேக இராசாக்கள் உண்டானர்கள். அநேக வம்சங்கள் உண்டாச்சுதுகள். அதுகளிலே துளுவ வம்ச மென்கிற வம்சத்திலே திம்மராயனென்று வெகு சௌர்யபராக்கிரமத் துடனே வெகு கீர்த்தியுள்ளவனுயிருந்தான். அவன் துளுவ வம்சத் திலே வெகு கீர்த்தியடைந்து உலகத்திலே வெகு பிரசித்தனுயிருக்கிற வன். அவனிடத்திலே புக்கமாசாணி என்று ஒரு பட்ட ஸ்திரீயிடத் திலே ஒரு இராசா உண்டானன். அவனிடத்திலே வெகுநீதி நயகுண லக்ஷண-உக்கிர-கெம்பீர-இப்படி அனேக குணங்களுடனேகூட நர சிங்கராயனென்று ஒரு இராசா பிறந்தான்.

நரசிங்கராயர் வித்யாநகரி பட்டணத்திலே நவரத்தின நிர்மிதமா யிருக்கிற சிங்காசனத்திலேயிருந்து பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு உத்தண்டனென்கிற மந்திரியுடனே கூட தெலுங்குதேசம் இரக்ஷித்துக்கொண்டு அதுக்கு

நரசிங்கராயர் பட்டம்-47

மேல் கர்னாட தேசத்திலேயிருக்கிற பாளையக்காரர் [1]டணாயகர்கள் இவர்கள் கப்பம் கொடுக்காதபடியினாலே உத்தண்டனென்கிற மந்திரி இராசாவினுடைய உத்தாரத்தின்படிக்கு சதுரங்க சேனைகளுடனே கூட கர்னாட தேசத்துக்குப் போய் அவர்களுடனே யுத்தம் பண்ணி சீவகியராயனைப் பிடித்து அந்த தேசத்திலே தானே பட்டம் கட்டி வைத்து அந்த பாளையக்காரர் கையிலே கப்பம் வாங்கிக் கொண்டு மலையாள, கேரளத்திலே விசயராசாவுடனே வெகு யுத்தம் பண்ணி செயித்து அனேக திரவியம் வாங்கிக்கொண்டு பாண்டியராசாவைச் சிநேகம் பண்ணிக்கொண்டு அவனிடத்திலே நின்றும் வெகு சேனைகள் சேர்த்துக்கொண்டு சோளதிராவிட தேசங்களிலே கப்பம் வாங்கிக்கொண்டு அங்கேநின்றும் உத்தர தேசத்துக்குப் போய் கலிங்க வங்காள தேசமட்டுக்கும் போய் அந்த தேசத்திலே அந்த ராசாக்கள் வெகு செனங்களுடனே யுத்தத்துக்கு வந்தவர்களை செயித்து கெசபதிராசாவை கொன்றுபோட்டு கங்காதர ராசா சேனையுடனே யுத்தத்துக்கு வந்து அவர்களை செயித்து அநேக துலுக்கர்களை செயம்பண்ணி வெகு திரவியம் ஆனைகுதிரைகள் பிடித்துக்கொண்டு விசயநகரி பட்டணத்துக்கு வந்து இராசா நரசிங்கராயரைக் கண்டு சகல சமாசாரமும் சொல்லி அப்போ நரசிங்கராயர் சந்தோஷப்பட்டு அந்த மந்திரிக்கு விசய உத்தண்டேந்திரனென்று பேர் கொடுத்து அவன் கொண்டுவந்த திரவியங்களை அநேக தேவாலயங்கள் கட்டி விறு(ரூ)பாக்ஷ தேவர் கோயில் நன்றாய்க் கட்டி பூதானம், கோதானம், கன்னிகா தானம் முதலான சோடச மகாதானங்கள் பண்ணி உலகத்திலே வெகு கீர்த்தியை அடைந்து அப்போ சகலமான ராசாக்களும் இந்த நரசிங்கராயருக்கு இராசாதிராச இராசபரமேசுவரராய மகாராயனென்று பேர்சொல்லி சகலமான பேரும் காணிக்கைகள் வைத்துக் கண்டார்கள். அப்போது மகாராயர் சந்தோஷப்பட்டு அவர்களுக்கு வஸ்திர பூஷணங்கள் முதலான வெகுமானம் பண்ணி ஹிமசேது மட்டுக்கும் வெகு கீர்த்தியை அடைந்தான்.

நரசிங்க ராயர்

அப்படிப்பட்ட மகாராயனுடைய ஸ்திரீகள் திப்பாக்ஷி, நாகலாதேவி. இந்த இரண்டு ஸ்திரீகளிடத்திலே கவுசலை, சுமித்திரை இந்த இரண்டு ஸ்திரீகளிடத்திலே ராமலக்ஷ்மணர்கள் உண்டானாப்போலே வீரநரசிங்கன் கிருஷ்ணராயனென்று இரண்டு பிள்ளைகள் உண்டானார்கள். வோபாம்பிகா ஸ்திரீயினிடத்திலே கிருஷ்ணன், ராமனைப்போலே ரங்கராயன் அச்சுதராயன் என்று இரண்டு பேர் உண்டானார்கள். இந்த நாலு பேர்களும் வெகு சூராளாய் அனேக வித்தைகள் சம்பாதித்து ஆனை குதிரைமேல் சவாரிபண்ணி இவர்கள் ஒருத்தருக்கு

[1] தண்ட நாயக்கர்கள்

ஒருத்தர் மிகவும் சிநேகத்துடனே கூட வளர்ந்தார்கள். அதின்பிறகு சகைவருஷம் 1401 சார்வரிவருஷத்திலே நரசிங்க மகாராயர் பரலோகத்தை அடைந்தார்.

வீரநரசிங்கராயர் பட்டம்-48

மகாராசாதிராச வீரநரசிங்கராயர் அவர்கள் விசயநகரிபட்டணத்திலே நவரத்தின கசிதமாயிருக்கிற சிங்காசனத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டது சகை வருஷம் 1401-சார்வரிவருஷத்திலே வீரநரசிங்க மகாராயர் தன்னுடைய தம்பிகளுடனே இராச்சியம் வெகுநீதிகளுடனே இரக்ஷித்துக்கொண்டு தங்கள் தகப்பன் நரசிங்கமகாராயர் காலத்திலே எந்தெந்த தேசங்கள் கப்பம் கொடுத்தார்களோ அந்த தேசங்களுக்கு மனிதர்களை அனுப்பிவைத்து கப்பம் கேட்டவிடத்திலே திராவிடதேசம், சோளதேசம், பாண்டியதேசம் இவர்கள் சிறிது திரவியம் கொடுத்து இந்த வீரநரசிங்கராயனை சிநேகம் பண்ணிக்கொண்டு போனார்கள். கர்னாடகதேசம், கொங்கதேசம் இரக்ஷிக்கிற [1]உன்(ம்)மத்தூரு தலைக்காடு முதலான [2]கெடிகளிலேயிருக்கிற பாளையக்காரர்கள் கப்பம் கொடுத்தனுப்பி வையாதபடியினாலே வீரநரசிங்கராயர் மிகவும் கோபித்துக்கொண்டு அனேக சேனைகள் [3]சேர்மானம் பண்ணி ஆனைகள், குதிரைகள் அனேக செனங்கள் முதலாயதண்டு சன்னாகம்பண்ணி தனக்கு தம்பியாயிருக்கிற கிருஷ்ணராயரை விசயநகரி பட்டணத்திலே வைத்து தானும் அச்சுதராயர், ஸ்ரீரங்கராயர் இன்னும் அனேக ராசகுமாரர்களுடனே உன்மத்தூருக்கு சமீபத்திலே இறங்கிக்கொண்டு நமக்கு முன்னாலே கொடுத்துக்கொண்டு வந்த திரவியம் கொடுத்தனுப்பி வைத்தால் உங்களை இவ்விடத்திலே இராச்சியம் இரக்ஷிக்கிரத்துக்கு நிச்சயம் பண்ணிப்போட்டுப் போவோம். கப்பங் கொடுத்தனுப்பிவையாமற் போனால் உங்கள் கோட்டைகளை நாம் பிடித்துக்கொண்டு எங்கள் மனுஷர்களை வைத்து இராச்சியம் இரக்ஷிப்போமென்று சொல்லி மனிதர்களை அனுப்பி வைத்தார். அப்போது உன்(ம்)மத்தூரிலே தியாபராசா என்கிறவன் சொல்லியனுப்பி வைத்தவயணம்—நாங்கள் இந்த தேசத்திலே வெகுநாளாய் இராச்சியம் இரட்சித்துக்கொண்டு இருந்தோம். எங்கள் வம்சத்திலே யிருக்கிற பேர்களாகட்டும் இந்த தேசங்களிலே கொங்கணி வருமம் ராசாக்கள் வெகுநாள் இராச்சிய பரிபாலனம் பண்ணினார்கள்; அவர்களாகட்டும் வேறேயொரு இராசாக்களுக்கு கப்பம் கொடுத்ததில்லை. அப்படியிருக்க உங்கள் தகப்பன் நரசிங்கராயர் பலத்தினாலே செயித்து கப்பம் வாங்கிக்கொண்டு போனார். விவகாரப்பட்டால் உங்களுக்கு நாங்கள் கப்பம் கொடுக்க ஞாயமில்லை. ஆகவே

---

[1] உம்மத்தூர் [2] கெடித்தலம்-இடையில் தங்கும் தலம் [3] சேர்மானம்-சேகரம்

நாங்கள் கப்பம் கொடுத்தனுப்ப மாட்டோமென்று சொல்லி அனுப்பி வித்தான். அதன்பிறகு அந்த சமாசாரம் வீரநரசிங்கராயர் கேட்டு மிகவும் கோபித்துக்கொண்டு அந்தப் பாளையக்காரர்கள் நம்முடைய இராச்சியத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இருந்த ஹரிஹரராயர் முதலான பேருக்கும் கப்பங் கொடுத்துக்கொண்டு வந்திருக்க இப்போதித்தனை விவகாரம் பண்ணவேண்டிய காரியம் என்ன இருக்கிறதென்று அந்த உன்மத்தூர் கோட்டையை முற்றுகை போட்டு மூன்றுமாதம் மட்டுக்கும் சண்டை செய்தவிடத்திலே அந்தப் பாளையக்காரர்கள் வெகு பலஞ்செய்துகொண்டு இவர்களைக் கோட்டைக்கிட்டே சேரவிடாமல் அடித்தார்கள். அப்போது நரசிங்க ராயர் அந்தக் கோட்டையைப் பிடிக்கமாட்டாமல் தண்டு திரும்பி ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு வந்து முற்றுகை போட்டவிடத்திலே முன்னலே பெரிய நரசிங்கராயர் சீவகிராயனுக்கு பட்டங்கட்டி யிருந்தார்கள். அந்த சீவகிராயன் மகன் வெகு பலத்துடனேகூட ஸ்ரீரங்கப் பட்டணம் கோட்டையை கெட்டிபண்ணிக்கொண்டு உன்மத்தூர் தலைக்காடு பாளையக்காரருக்கு சொல்லியனுப்பிவைத்து அங்கே யிருந்து வெகு சேனைகள் அழைப்பித்து கோட்டையை விட்டு வெளியிலே வந்து வீரநரசிங்கராயர் தண்டிலே விழுந்து யுத்தம் பண்ணினன். அப்போது வீரநரசிங்கராயர் கொஞ்சம் அபசெயத்தை அடைந்து தண்டு திரும்பி வித்தியாநகரிக்கு வந்து கிருஷ்ணராய ருடனே அந்த உன்மத்தூரும், ஸ்ரீரங்கப்பட்டணமும் வெகு பந்தோபஸ்தா யிருக்கிறபடியினலே சேனைகள் அதிகமாகச் சேர்த்துக் கொண்டு வேண்டிய (வ)ஸ்த்துக்கள் வைத்துக்கொண்டு அந்த தேசத்தைக் கட்டவேண்டுமென்று யோசனை பண்ணி இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அதன்பிறகு வீரநரசிங்க ராயர் அநேக தருமங்கள் பண்ணி துலாதானம், காலபுருஷ தானம், ஸ்வர்ணமேரு தானம், அசுவதானம், கெசதானம், கோதானம், பூதானம், கன்னிகாதானம், பிரும்ம பிரதிஷ்டை தானம் இதுக ளெல்லாம் பண்ணி அநேக அன்னதானம் சத்திரங்களிலே போடு வித்து பூதானத்திலே பரசுராமனைப் போலே உலகத்திலே கீர்த்தி யடைந்து, இராசாதிராச இராசபரமேச்வர பிரவுட பிரதாப மகாராய ரென்று கிதாபு பிருது அடைந்து சகைவருஷம் 1425 ருத்ரோத்காரி வருஷத்திலே வைகுந்தபதத்தை அடைந்தார். அதற்குமேல் அவர் தம்பி கிருஷ்ணராயர் பட்டம்.

கிருஷ்ணராய மகாராயர் பட்டம்.49

கிருஷ்ணராயர் விசயநகரி பட்டணத்திலே நவரத்தின மயமா யிருக்கிற சிம்மாசனத்திலே சகைவருஷம் 1426 ரத்தாக்ஷ வருஷம் சைத்திரமாதத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக் கொண்டு தன் தம்பி அச்சுதராயர் ரங்கராயருடனேயும் தன்னுடைய மந்திரி......................இராச்சியம் அநேகம்

தருமத்துடனே இரக்ஷித்து கிருஷ்ணமூர்த்தியென்று தங்கசாலை போட்டு அதிலே ரங்கநாயகருக்கு ஒரு தருமம் உண்டுபண்ணி அதற்கு மேல் விசயநகரி கோட்டை நன்றாய்க் கட்டி பெனுகொண்டை சந்திரகிரி இதுமுதலான கோட்டைகளைக் கட்டிவைத்து வெகு செனம் சேர்மானம் பண்ணி அனேகம் ஆனைகள் அனேகம் குதிரைகள் இது முதலானதும் சேர்மானஞ்செய்து இராச்சியங்கள் கட்டவேணுமென்று திராவிட தேசத்துக்குப் போய் அவ்விடத்திலே காஞ்சி, செஞ்சி, வேலூர் முதலான கெடிகள் கைவசம் பண்ணிக்கொண்டு வேலூர் கோட்டை வெகு பத்திரமாய்க் கட்டி அதிலே தங்கள் மனுஷிய ராசகுமாரர்களை வைத்து இராச்சியம் தருமநீதியாய் இரக்ஷித்துக் கொண்டு இருந்தார்கள். அப்போது கர்னுடகதேச இராசாக்களிலே உன்மத்தூரு இராசாக்கள் சிவன சமுத்திரத்தைக் கைவசம் பண்ணி அந்த கோட்டை இரண்டுபுறத்திலேயும் காவேரி வருகிறபடியினாலே அந்தக் கோட்டையை நன்றாய்க் கட்டி அனேக பீரங்கி முதலான ஆயுதங்களினாலேயும் கெட்டிபண்ணி அந்த தியாபராசா ஸ்வர்க்கத்தை அடைந்தான். அதின்பிறகு அவன் மகன் கெங்கராயன் அதிலே இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டு அந்தக் கோட்டையை வெகு ஆயுதங்களினாலேயும் அனேக செனங்களினாலேயும் வெகு பத்திரம் பண்ணிக்கொண்டு இருந்தார்கள். அதின்பிறகு ராயகிருஷ்ண ராயர் கர்னுடக தேசத்து பாளையக்காரர் இராசாவுடனே யுத்தம் பண்ணி செயித்து அந்த தேசம் கட்டிக்கொள்ளவேண்டுமென்று பூர்வத்திலே தன்னுடைய தமையனார் வீரநரசிங்கராயர் போய் செயமில்லாமல் வந்தபடியினாலேயும், அவர்கள் கப்பம் கொடுக்காமலிருக்கிறபடியினாலேயும் அவர்கள் பேரிலே வெகு கோபத்தை அடைந்து ஆனை, குதிரை, பதாதி, பீரங்கி முதலான ஆயுதங்கள் சிறிது பாளையக்காரருடனேயும் கூட புறப்பட்டு கர்னுடகதேசம் காவேரி தீரத்திலே பச்சிமரங்கத்துக்குக் கிழக்கே சிவன சமுத்திரக் கோட்டையை [1]முத்திகை செய்து, அவனுக்கு சத்துருவாயிருக்கிற சிக்கராயனை சேர்த்துக்கொண்டு இன்னம் சிறிது பாளையக்காரர்களுடனே கூட பிரேத பருவதம் கெவுருயன் மலை இவ்விடத்திலே தண்டிறங்கிக்கொண்டு ஒரு வருஷத்துக்கு மேலே ஒத்தினக்கடபை காவேரி வழியாய் கோட்டை அல்லா பண்ணினவிடத்திலே அந்த கங்கைராயன் கங்கன் சுக்கியென்கிற காவேரி மடுவிலே விழுந்து போனான். அதின்பிறகு கிருஷ்ணராயர் அந்தக் கோட்டையை கைவசம் பண்ணிக்கொண்டு அதிலே தங்கள் மனிதர்களை வைத்து ஸ்ரீரங்கப்பட்டணத்துக்கு வந்து அந்த பட்டணமும் செயம்பண்ணிக் கொண்டு ஸ்ரீரங்கப்பட்டணத்திலே [2]காம்ப கெவுடன், வீரப்ப கெவுடன்

---

[1] முற்றுகை. [2] கெம்பே.

கிருஷ்ண ராயர்

இவர்கள் வசத்திலே சிறிது தேசங்கள் விட்டு சிக்க ராயன் வசத்திலே சிறிது தேசங்கள் விட்டு, அங்கங்கே யிருக்கிற பாளையப்பட்டுகளெல்லாம் செயம்பண்ணி அங்கங்கே மனிதரை யேற்படுத்தி பேரீசு திரவியம் ஏற்படுத்தி கர்னுட தேசம் கோடி திரவியமென்று கட்டுசெய்து தன்னுடைய தஸ்ததிரத்திலே கணக்கு தாக்கல் பண்ணிக்கொண்டு கர்னுடதேசத்துக்குப் பெரிய பட்டணமாய் ஸ்ரீரங்கபட்டணத்தை கெட்டிப்பண்ணிக் கொண்டு இருந்த சகைவருஷம் 1304 பிரபவ வருஷத்திலே மகாபிருது உண்டுபண்ணி அதிலே கிருஷ்ணராயர் கொடி சங்கு சக்கிரமிருக்கிறதாய் கொடி போட்டு அங்கே இருந்து புறப்பட்டு குடகு, மலையாளம், கேரளம், இவையெல்லாம் ஒருபுறமாய் செயித்து கப்பம் [1]நிகுதிப் பண்ணிக்கொண்டு பாண்டியதேசம் சோள தேசமும் கைவசம் பண்ணிக்கொண்டு அங்கேயிருந்து விசயநகரி பட்டணத்துக்கு வந்து அங்கே அநேக சேனைகள், அநேக பாளையக்காரர்கள், அநேக குதிரைகள், மருந்து குண்டுகள், ஆயுதங்களுடனேயும் இரண்டாஞ் சமுத்திரம்போலே தண்டுபுறப்பட்டு உத்தரதேசத்துக்குப் போய் கலிங்கதேசத்து இராசாவை சினேகம் பண்ணிக்கொண்டு, அவனையும் அழைத்துக்கொண்டு இந்துதேச வழியாய் குச்சரதேசம், மகததேசம் இன்னும் அனேகதேசம் செயம்பண்ணி கப்பம் வாங்கிக் கொண்டு அநேக துலுக்கர்களை செயித்துத் திரும்பி வித்யாநகரி பட்டணத்துக்கு வந்து நவரத்தினமயமாயிருக்கிற சிம்மாசனத்திலே யிருந்து கொண்டு எது குலோத்பவ ராசமார்த்தாண்ட ராசகெம்பீர மகாராச பூசித கிருஷ்ணமகாராயர் என்று வெகு கீர்த்தியை அடைந்து ஹிம, சேது மட்டுக்கும் வெகு கீர்த்தியை யடைந்து சதாசிவ ராயனென்கிற சேனாதிபதியுடனே கூட இராச்சியம் இரக்ஷித்துக் கொண்டு வெகு தருமங்கள் பண்ணினர். மேரு சுவர்ணதானம் முதலான சோடச மகாதானம் பண்ணின சகை வருஷம்..................1400, வைகுண்டத்தை அடைந்தார்.

கிருஷ்ண ராயர் தருமம்

சகைவருஷம் 1429 வருஷத்திலே ஸ்ரீரங்கபட்டிணம் அரிகரராசஐயன் கிருஷ்ணராசர் அப்பணையினலே ஸ்ரீபச்சிமரெங்க சுவாமிக்கு பூமிதானம் பண்ணின வயணம் சகைவருஷம் 1445-பார்த்திப வருஷம் மாகசுத்த பௌர்ணமி சந்திர கிரஹண புண்ணியகாலத்திலே ஸ்ரீ கிருஷ்ணராயர் அவர்கள் துங்கபத்திரா தீரத்திலே விரூபாக்ஷசுவாமி கோவில் சமீபத்திலே உதையகிரியிலே கிருஷ்ணசுவாமி பூசை நைவேதனம் உச்சவத்துக்கு வேதமூர்த்தி 'திருமலைதாதாசாரி' பவுத்திரன் தாதாசாரியாருக்கு

---

[1] நியதி.
இங்கு சகம் தப்பாயிருக்கிறது விசாரிக்க வேண்டுமென்று தெலுங்கு பாஷையில் எழுதியிருக்கிறது.

புத்திரன் இம்மடி தாதாசாரியாருக்கு அந்த பட்டணத்திலேயிருக்கிற முப்பத்தேழு கோத்திரம் கம்மவாருகூட வருஷம் ஒன்றுக்கு வீடு ஒன்றுக்கு ஒரு விராகன் விழுக்காடு கொடுக்கிறதாய் திட்டம் பண்ணி கலியாணம் பண்ணுகிற சனங்கள் பெண்ணுக்கு ஒரு பணம் பிள்ளைக்கு ஒரு பணம் இந்தப்படி இந்த சனங்கள் கையிலே வாங்கிக்கொள்ளவுமென்று சாசனம் பண்ணிக்கொடுத்தான்.

அச்சுதராயர் பட்டம்.50

கிருஷ்ணராயர் ஆண்ட வருஷம் 37. அதுக்குமேல் கிருஷ்ணராயர் தம்பி அச்சுதராயர் விசயநகரி சிம்மாசனத்திலேயிருந்துகொண்டு திராவிட, ஆந்திர, கர்னாடகதேசம் இரக்ஷித்துக்கொண்டு சென்னப்பண்ணனென்கிற சேனாதிபதியுடனே ரங்கராயர் முதல் சகல ராயர்களுடனே இராச்சியம் தருமத்துடனே இரக்ஷித்து, திராவிட, ஆந்திர, கர்னாடகதேசம் இரக்ஷித்துக்கொண்டு வெகு சேனைகளுடனே சந்திரகிரி, பெனுகொண்டை, வேலூர் இந்தக் கோட்டையை இரக்ஷித்துக்கொண்டு வெகு தருமம் பண்ணி வீரநரசிங்கராயர், கிருஷ்ணராயர் இவர்களைக் காட்டிலும் அதிகமாய் தேவபிராமணாள் பத்தி உண்டாய் சகல சாதியினிடத்திலேயும் தயவு செய்து பச்சிமரங்கஸ்வாமிக்கு அநேக திரவியம் செலவழித்து ரதோச்சவாதிகள் பண்ணிவைத்து சகைவருஷம் 1480 வநு மேல் சித்தார்த்தி வருஷத்திலே ரங்கநாயகர் பதத்தை அடைந்தான். ஆண்ட வருஷம் 18.

ராமராயன் பட்டம்-51 சகை-1481

அதின்பிறகு கிருஷ்ணராயன் [1]மகன் ராமராயன் விசயநகரி பட்டணத்திலே நவரத்தின சிம்மாசனத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு தம்பி திம்மராயனுடனேகூடவும், சேனாதிபதி சதாசிவராயனுடனேகூடவும் திராவிட, ஆந்திர, கர்னாடகதேசம் இரக்ஷித்துக்கொண்டு உத்தரதேசம் செயம் பண்ணவேணுமென்று அனேக பலங்களுடனே வெகு சேனை சேர்த்துக்கொண்டு உத்தரதேசத்துக்குப்போய் அங்கேயிருக்கிற துலுக்கர்களுடனே சண்டைபண்ணி செயம்பண்ணிக்கொண்டு திரும்பி வித்யாநகரி பட்டணத்துக்கு வந்து தனக்கு சமானம் ஒருத்தருமில்லையென்று இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டிருந்தான். அதின்பிறகு வடதேசத்திலேயிருக்கிற துலுக்கர்கள் வெகு சேனைகள் சேர்த்துக்கொண்டு விசயநகரி பட்டணத்துக்கு யுத்தத்துக்கு வருகிறார்களென்று சமாசாரம் கேட்டு ராமராயன் சகல சேனைகளுடனே கூட யுத்தத்துக்கு எதிரே போய் யுத்தஞ்செய்தவிடத்திலே அந்த துலுக்கர் சேனை மிகவும் அதிகமாய் வந்தபடியினாலே செயமில்லாமல் ஆனைகுந்திக்கு வந்து அங்கே சிறிது செனங்களை வைத்து அதுக்கு

[1] மருமகன்.

மேல் சகல வஸ்து முதலானதும் எடுத்துக்கொண்டு பெனு கொண்டைக்கு வந்து கோட்டையை கெட்டிபண்ணிக்கொண்டிருந் தார். அப்போது ராமராயருக்கும் துலுக்கர்களுக்கும் ராசியாய் ஆனைகுந்தியை துலுக்கர் கட்டிக்கொண்டு சிறிது தேசம் கைவசம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். ராமராயர் பெனு கொண்டையிலே தானேயிருந்துகொண்டு இராச்சியம் இரக்ஷித்துக் கொண்டிருந்தார். அவருக்கு ஸ்ரீரங்கராயர், ராமராயர், வெங்கிடபதி ராயர் மூணு பிள்ளைகள் உண்டானார்கள். அதின்பிறகு ராமராயன் ஸ்வர்க்கத்தை அடைந்தார். சகை வருஷம் 1494. ஆண்டவருஷம் 15.

ஸ்ரீரங்கராயன் பட்டம்-52

அதின் பிறகு ஸ்ரீரங்கராயன் பெனுகொண்டையிலே பட்டாபி ஷேகம் பண்ணிக்கொண்டது சகை வருஷம் 1496 யுவ வருஷத்தில் ராசாதிராச ஸ்ரீரங்கராயரென்று கீர்த்தியை அடைந்து அவன் தம்பி ராமராயனை ஸ்ரீரங்கபட்டணத் திலே வைத்து தம்பி வெங்கிடபதிராயனை சந்திரகிரியிலே வைத்து இராச்சியம் வெகுநீதியுடனே இரக்ஷித்து அனேக தருமங்கள் பண்ணி யிருக்கிற காலத்திலே ஸ்ரீரங்கப்பட்டணத்திலே யிருந்த ராமராயன் காலதர்மத்தை அடைந்தான். அப்போது ஸ்ரீரங்கபட்டணம் [1]காம்ப கெவுடன், வீரப்ப கெவுடன் இந்த இரண்டு பேரும் ஸ்ரீரங்கபட்டிணம் கெட்டி பண்ணிக்கொண்டு பெனுகொண்டையில் ஸ்ரீரங்கராயனுக்கு கப்பம் அனுப்பி வைத்துக்கொண்டிருந்தார்கள். அப்போது சிக்க ராயபட்டணம் பாளையக்காரன் சிக்கராயன் என்கிறவன் வெகுசனம் சேர்த்துக்கொண்டு ஸ்ரீரங்கபட்டணம் அல்லா செய்து அந்தக் கோட் டையை கைவசம் செய்துகொண்டு அதைச் சேர்ந்த தேசங்களையும் கட்டிக்கொண்டிருந்தான். அந்த சமாசாரம் ஸ்ரீரங்கநாயர் கேட்டு முன்னாலே ஸ்ரீரங்கபட்டணத்திலே யிருந்த ராமராயர் மகன் திருமலைராயனை அழைத்து ஸ்ரீரங்கப்பட்டணத்திலே யிருந்து இராச்சியம் இரக்ஷிக்கச் சொன்னார். அந்தப்படி திருமலைராயர் மட்டி வெங்கிடையனை தளவாயாக வைத்துக்கொண்டு அனேகம் சேனைகளுடனே ஸ்ரீரங்கப்பட்டினத்துக்கு வந்தவிடத்திலே இந்த பட்டணத்து ராசா மகன் வந்தானென்று சிக்கராயன் அவர் கள் வசம் கோட்டையை விட்டுவிட்டான். அப்போது திருமலைராயன் ஸ்ரீரங்கபட்டணத்திலே யிருந்து தேசம் கைவசம் பண்ணிக் கொண்டான்.

திருமலைராயர் பட்டம்-53 சகை 1506

திருமலைராயர் ஸ்ரீரங்கபட்டணத்திலே சகை 1506 பார்திப வருஷத்திலே நவரத்தின நிர்மிதமாயிருக்கிற சிம்மா சனத்திலே பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு மட்டி வெங்கிடையனென்கிற தளவாயுடனே கூட கர்னடக ராச்சியமெல்லாம் கைவசம் பண்ணிக்கொண்டு ஸ்ரீ

---

[1] கெம்பே.

ரங்கநாயகருக்கு அநேக பூமி விட்டு கோவில்கள் பழுதுபார்த்து தருமங்கள் முன்னாலே ராயர் நாளிலே நடந்தபடி நடப்பித்து இராச ராசாவென்று கீர்த்தியை அடைந்திருந்தான். அப்போது சகை 1512 கரவருஷத்திலே பெனுகொண்டையிலே யிருந்த ஸ்ரீ ரங்கராயன் ஸ்வர்க்கத்தை அடைந்தபிறகு அவன் மகன் வெங்கிடபதி ராயனுக்கு பெனுகொண்டையிலே பட்டாபிஷேகமாய் அந்த ராச்சியம் அவன் இரக்ஷித்தான். ஸ்ரீ ரங்கராயன் தம்பி வெங்கடபதி ராயன் சந்திரகிரியிலே இரக்ஷித்துக்கொண்டிருந்தான். இப்படி இருக்கச்சே மதுரை வீரப்ப நாயகன் தன்னுடைய சகல பலத்துடனே ஸ்ரீ ரங்கப்பட்டணத்துக்கு வருகிறானென்ற சமாசாரம் திருமலை ராயன் கேட்டு தன்னுடைய தளவாய் வெங்கிடபதியையனுடனே கூட சகல பலமும் அழைத்துக்கொண்டு எதிரே பழனிக்குச் சமீசத்திலே யிறங்கி அவர்களுடனே வெகுயுத்தம்பண்ணி செயித்து மதுரையான் அபசெயத்துடனே பின்னடைந்து போனதினாலே தளவாய் வெங்கிடபதியையன் இராசாவையும் அழைத்துக்கொண்டு தொடர்ந்துபோய் மதுரை சீமையெல்லாம் கொள்ளைபண்ணினவிடத்திலே மதுரைவீரப்பனாயகன் வெங்கிடபதிராயனுக்கு அநேக திரவியங் கொடுத்தான். அதனாலே சந்தோஷப்பட்டு வெங்கிடபதிராயன் வஞ்சனை உபாயத்தினாலே திருமலைராயனை அவர்கள் கையிலே சிக்கப்பண்ணி தான் சகல பலத்துடனேகூட ஸ்ரீ ரங்கப்பட்டணத்துக்கு வந்து இராச்சியம் இரக்ஷித்துக்கொண்டிருந்தான். அதன்பிறகு திருமலைராயன் அவர்களிடத்திலே நின்றும் விடுதலைசெய்துகொண்டு ஸ்ரீ ரங்கபட்டணத்துக்கு வந்தவிடத்திலே வெங்கிடையன் அவனைப் பட்டணத்திலே வரவிடாமல் துரத்திவிட்டான். அப்போது திருமலைராயன் மாலிங்கைகேசரை என்கிற கிராமத்திலே போயிருந்தான். அப்போது சமஸ்த பாளையக்காரர்கள் வெங்கிடபதியையன் பேச்சைக் கேட்டுக்கொண்டு திருமலைராயன் ஆகாதென்று தங்களுடைய பலத்துடனேகூட கேசரை யென்கிற கிராமத்திலே வந்து முத்திகைபோட்டவிடத்திலே மைசூர் ராசா தன்னுடைய பலத்துடனே கேசரைக்கு வந்து அந்தப் பாளையக்காரருடனே யுத்தம்பண்ணி அவர்களை முறியடித்து அங்கேயிருந்தபடியினாலே ஸ்ரீ ரங்கபட்டணத்துக்கு வந்து வெங்கிடபதியையன் கொஞ்ச பலத்துடனேயிருந்த கோட்டையில் வஞ்சனையாய் உபாயத்தினாலே சிறிது சனங்கள் உள்ளே வந்து, அதுக்குமேல் [1]ராசா உடையரும் உள்ளே வந்து கோட்டை கைவசம்பண்ணிக்கொண்டார். சகை வருஷம் 1531 சௌமிய வருஷம் மைசூர் இராசாக்கள் வம்சத்தில் ராச உடையார் வம்சமாச்சுது.

---

[1] ராச உடையார்-முதல் மைசூர் வம்ச அரசன்.